குடும்பத்துடன் களிக்க...

# கல்கி

KALKI 6.11.2005
ரூ.7.00
96 பக்கங்கள்

# தேர்தல் களத்தில் நயன்தாரா!

ஷாக் ரிப்போர்ட்:

## கொள்ளை போகும் வெள்ள நீர்!



# இந்தியாவின் No.1 டீலர் வசந்த் & கோ

தரம் • நம்பிக்கை
வசந்த் & கோ

## இப்பொழுது தீபாவளி

சிறப்பு விற்பனை ஏராளமான பரிசுகளுடன்

**SONY** 21"CTV 21HF100
MRP விலை : ~~Rs.19,990/-~~
சிறப்பு விலை : Rs.14,500/-

**Flat CTV + Mobile Phone**
**ரூ. 6750/-**

### நிச்சய பரிசுகள் – நீட்டிக்கப்பட்ட வாரண்டி

| | |
|---|---|
| SAMSUNG | அசத்தல் ஓ அசத்தல் ஆஃபர் மூலம் எலெக்ட்ரிக் கெட்டில் முதல் LCD டிவி வரை பரிசுகள் |
| LG | கலர்டிவிகளுக்கு 2 வருட கூடுதல் வாரண்டி மற்றும் மங்களம் சுப மங்களம் ஆஃபர் மூலம் Bowl set முதல் கம்ப்யூட்டர் வரை பரிசுகள் |
| Whirlpool | 'Assured Gift Offer' மூலம் வாங்கும் பொருளை பொறுத்து 2300 மதிப்புள்ள Diamond pendant + Holiday package அல்லது Adidas Drum Bag + Holiday package பெறலாம். |
| HYUNDAI | கலர்டிவிகளுக்கு 2 வருட கூடுதல் வாரண்டி மற்றும் Hot Card Offer மூலம் Wrist Watch முதல் Hyundai Elantra Car வரை பரிசுகள் |
| Haier | கலர்டிவிகளுக்கு 3 வருட நீட்டிக்கப்பட்ட வாரண்டி மற்றும் நிச்சய பரிசாக கடிகாரம் முதல் Plasma டிவி வரை பெறலாம் |
| ONIDA | 'Pucca Gift Offer' மூலம் Bag முதல் LCD டிவி வரை பெறலாம்." 29" Flat CTV உடன் Milton Dinner Set இலவசம் |
| PHILIPS | கலர்டிவிகளுக்கு 2 வருட கூடுதல் வாரண்டி முதல் ஹோம் தியேட்டர் வரை பரிசுகள். மேலும் போட்டியில் பங்கு பெற்று ஜெர்மனி சென்று வர வாய்ப்பு |
| Electrolux | Tathastu Baba Offer மூலம் Tea Coffee Sugar Set முதல் Hyundai Getz Car வரை பரிசுகள் |
| VIDEOCON CTVs | Kismat Ka king Offer மூலம் 12 pieces yera Set முதல் Plasma TV வரை பரிசுகள் |
| VIDEOCON Appliances | குறிப்பிட்ட மாடல்களுக்கு ரூ.1000 மதிப்புள்ள 'Pearl Set' இலவசம் |

- தவணைமுறையில் வாங்குவோருக்கு எல்லா பொருளுக்கும் 0% Interest Free
- No Processing Fee.
- குறைந்த முன்பணம், குறைந்த மாதத் தவணை.
- குறிப்பிட்ட Finance Company-யில் Free Gift பெறலாம்.
- Electronic Clearence Service வசதி உள்ளது.
- Countrywide Bank மூலம் பொருட்கள் வாங்குவோருக்கு Holiday package Voucher Free.
- Credit Card வாடிக்கையாளர்களுக்கு Service Charges கிடையாது.
- கிரெடிட் கார்டு மூலம் பொருள் வாங்குவோருக்கு 6 மாத வட்டியில்லா தவணை முறை வசதி.
- ICICI வங்கியில் 5% Cash Back Offer Scheme. - (EMI-on-call)
- HSBC வங்கியில் 10% Cash Back Offer Scheme (Minimum Amt upto Rs.1,000)
- ICICI Credit Card மூலம் பொருட்களை வாங்கும் வாடிக்கையாளர்களுக்கு DVD Player வெல்ல வாய்ப்பு
- December 31 வரை Rs. 30000-க்கு பொருள் வாங்கினால் Citi Bank மூலம் Free Air Ticket வெல்ல வாய்ப்பு



## VASANTH & CO.

Godrej | HITACHI | IFB | SHARP | GENERAL | Carrier | EUREKA FORBES | KENSTAR | ULTRA | Mantra

சென்னை : தி.நகர் – 52010572, 52029797, 52010573 கோடம்பாக்கம் – 52010576 அடையார் – 52010579 குரோம்பேட்டை – 52010582 புரசைவாக்கம் – 52010571 மயிலாப்பூர் – 52010578 ராயபுரம் – 52010584 வண்ணாரப்பேட்டை – 52010583 பாடி – 52010577 நங்கநல்லூர் – 52056514 ஆலப்பாக்கம்–போரூர் – 52010581 தாம்பரம் – 52010575 செங்கல்பட்டு – 226241, விழுப்புரம் - ஹாஸ்பிடல் ரோடு, வேலூர் – காட்பாடி ரோடு, ஆற்காடு ரோடு, சத்துவாச்சாரி, மதுரை – தெற்கு மாசி வீதி, திண்டுக்கல் – புதிய அக்ரஹாரம் தெரு, பழனி ரோடு, திருச்சிராப்பள்ளி – போர்ட் ஸ்டேஷன் ரோடு, தஞ்சாவூர் – சௌத் ராம்போர்ட், அரவிந்த் காம்ப்ளக்ஸ், பட்டுக்கோட்டை – அறந்தாங்கி ரோடு, திருநெல்வேலி ஜங்ஷன் – பராசக்தி பில்டிங்ஸ், புதுக்கோட்டை – திருமண மண்டபம், பாளையங்கோட்டை – திருவனந்தபுரம் ரோடு, தூத்துக்குடி – பீஸ்ஸ் பிளாசா, கோவில்பட்டி – AKS தியேட்டர் ரோடு, நாகர்கோவில் – பாண்டிச்சேரி – மகாத்மா காந்தி ரோடு, கோயம்புத்தூர் – ஒப்பணக்கார தெரு, க்ராஸ் கட் ரோடு, சேலம் – முதல் அக்ரஹாரம் பிளாசா, ஈரோடு – பெருந்துறை ரோடு, திருப்பூர் – குமரன் ரோடு, ஓசூர் – தாலுகா ஆபீஸ் ரோடு, பெங்களூர் – 101/1, கே.கே. ரோடு, (டபுள் ரோடு) பிரெஸ்டிஜ்கோர்ட்

தொடரும் விற்பனை உண்டு

# கஸ்தூரிமான்

உரசிகினா, இடிச்சிகினா பக்குன்னு பத்திக்கிறதுதான் லவ்வு! இதான் நம்ம கோடம்பாக்கத்து நைனாங்க போட்டு வெச்ச காதல் ரூட்டு! அத டமால் பண்ணிக் காட்றேன்னு படா சோக்கா ஒரு லவ்வை காட்டுறார்ப்பா லோகிததாஸ்! அதாவது காதல்னு வந்துட்டா ஒருத்தரு ரோதனைய இன்னொருத்தரு தலையில தூக்கிச் சொமக்கறது... அழுகாச்சி வந்தா ஆறுதலா பக்கத்துல இருந்து முதுகாண்ட தட்டிக் குடுக்குறது... அப்பால காதலுக்கு இன்னா சோதனை வந்தாலும் நெஞ்சை நிமித்திக்கிட்டு நிக்கறது... இது எல்லாத்தையும் பிரசன்னா - மீரா ஜாஸ்மின் ஜோடி ரொம்பப் பிரமாதமா பண்ணியிருக்குப்போய்!

பிரசன்னாவோட நைனா இருக்காரே, மொத்தத் துட்டையும் சினிமாவுல வுட்டுட்டு நிக்கிற மாடிவூட்டு எம்.டி. பாக்கெட்டு... கால நாஷ்டா இல்லாமலே வெறும் வவுத்தோட காலேஜி போற ஹீரோ. காதுல ஹெட்ஃபோனு, கலர்ஃபுல் ட்ரெஸ்ஸுங்களு ஜமாய்க்கற ஹீரோயினு. ஆனா அந்தப் பொண்ணு ரொம்ப ஏழைப் பொண்ணுப்பா. அது குடும்பச் சூழ்நிலைய மறைச்சுக்கிட்டு பார்ட்டைம் வூட்டு வேல, பத்துப்பாத்திரம்னு தேய்ச்சு... ஹீரோ படிக்க பீஸு கட்டுதுன்னா இன்னா... லவ்லீ ஹார்ட்டுப்பா...! சும்மா சொல்லக்கூடாது நைனா... இதே மலையாளப் படத்துக்குத்தானே தேசிய விருது வாங்கிச்சு... இப்போ தமிழுக்கும் ஒண்ணை தாராளமா தரலாம்.

ரீயட்ல அழுவுற ஹீரோயினிய இதுக்கு முன்னால நம்ம சினிமாவுல காட்லேப்பா! ஃபைட்டுகூட இருக்கு நைனா. ஆனாக்கா நம்ம விஜய், சூர்யா மாதிரி சாகஸமெல்லாம் கெடையாது. நெசத்துல சராசரி மனுசங்க மல்லு கட்டுவாங்களே, அதேமாதிரி செமரியலா கைகலப்பு. அதேமாதிரி கலகலப்பு.

கேரளாவுல இருந்து ஷம்மி, கொளப்புள்ளி லீலான்னு ஒரு சூப்பர் நடிகரு, ஒரு சூப்பர் நடிகை ஆக ரெண்டு பேர தமிழுக்கு சமர்ப்பணம் பண்ணிவுட்ட டைரக்டருக்கு ஸ்பெஷலா ஒரு சலாம் போடலாம்.

நம்ம இலக்கியவாதி ஜெயமோகன் மொதல்தபா டைலாக் எழுதிகினாரு. பஞ்சு டைலாக்கு, பஞ்சரான டைலாக்கு எதுவும் எழுதாம, கேரக்டருங்க என்னா பேசுமோ அதேமாதிரி எழுதி அசத்திப்புட்டாரு. கொஞ்சம் அங்கங்க லிட்ரரி கவுச்சி அடிக்குது. ஸ்பெஷலா கவுனிச்சி படத்துக்கு ட்ரீட் கொடுத்திருக்காரு இசைராசா.

இன்னாது! படத்துல கொறையா? சும்மா நோண்டாம, படத்தப் பாருப்பு.

**- லஜ்ஜாவதி**

# வட்டமேஜை




✉ தீபாவளி நேரம் பார்த்து, 'ஷாப்பிங் ஸ்பெஷல்' வெளியிட்டு எங்கள் பாக்கெட்களை காலி செய்த கல்கியின், ஆண்கள் விரோதப் போக்கை, வன்மையாகக் கண்டிக்கிறோம்.

**வேலாயுதம்பாளையம், எம்.சம்பத்**

✉ இதுவரை எந்த இதழிலும் வெளிவராத தகவல்களை அள்ளித் தந்த 'ஸ்டார் ஷாப்பிங்' படிக்க படு சுவாரசியமாக இருந்தது.

**ஆரணி, வி.சாந்தி**

# பகுத்தறிவு சல்யூட்!

✉ பகுஜன் சமாஜ் மாயாவதி பற்றிய வாசகர் கேள்விக்கு, 'இதில் நான் பெரியார் கட்சி' என நெற்றியடியாக பதில் கூறிய தராசுக்கு ஒரு பகுத்தறிவு சல்யூட்!

**குனியமுத்தூர், கே.கே.பாலசுப்ரமணியன்**

✉ ஏழு இசையைத் திறம்படக் கற்ற கலைஞன் இனிய இசையைத் தருவது போல, ஏழு கட்சிகளைத் திறமையாகச் சமாளித்து முழு

✉ ஷாப்பிங் ஸ்பெஷல் ஜோக்குகள் எல்லாம் ஜோரா இருந்ததுப்பு!

**கோவை, ராமு அர்விந்த்**

✉ 'ஸ்டார் ஷாப்பிங்' செய்தித் தொகுப்பை வழங்கிய 'எம்டி பர்ஸ்' எமி என்ற பெயரைப் படித்ததும் சிரிப்பு கொப்பளித்து வந்தது; நல்ல லொள்ளுங்க!

**பெங்களூர், யமுனா ரெங்கநாதன்**

✉ 'தீபாவளி அன்றும் இன்றும்' குட்டி பிரசன்னாவின் கற்பனை படு ஜோர்! அதிலும், பாட்டி 'ரண்டக்க' பாடலைக் கேட்பது செம சிரிப்பு.

**கோவிலாம்பூண்டி, பாலாஜி கணேஷ்**

✉ சின்னச் சின்ன சம்பவங்களின் மூலமாக வாழ்வியலுக்குத் தேவையான பெரிய விஷயங்களை எடுத்துரைத்த சுதாமூர்த்தியின் உள்ளங்கையில் உலகம், இனி கல்கி வாசக உள்ளங்களிலும் சுற்றி வரும்.

**நெய்வேலி, சு.ஸ்ரீகாந்த்**

✉ 'பாதங்களைப் பரிசுத்தமாக வைக்க நினைத்தால், ஒன்று உலகத்தையே ஒரு மூடியால் மூடி வைத்துவிடு. அல்லது உன் பாதங்களை மட்டும் மூடிக் கொள்ள செருப்பு அணிந்து கொண்டு விடு' என்ற சுதாமூர்த்தியின் வார்த்தைகள் பிரமாதம். தொடர் அதற்குள் முடிந்துவிட்டதே?

**சென்னை - 116, ஜே. துரைராஜ்**

வெற்றி பெறுவார் கலைஞர்!

**கோ.புதூர்,** **இரா. சக்ரபாணி**

'சாவு செலவு' கிராமிய மணம் மாறாத அற்புதமான கதை. அன்னாம்மாவுக்கு கண்ணீர் வந்ததோ இல்லையோ, எனக்குக் கண்ணீர் வந்தது.

**சுரண்டை,** **எஸ்.ஏ.லக்ஷ்மண பெருமாள்**

"என்னோட அழகுக்கும் அறிவுக்கும் தேவைக்கும் அதிகமாகவே சம்பாதிக்கும்பொழுது ஏன் சண்டை போடணும்?"-என்று வெளிப்படையாக உண்மை பேசிய சத்யராஜ் மனதில் நிற்கிறார்.

**தேவூர் மேட்டுக்கடை,** **சியாமளா ஈஸ்வரன்**

ஷாப்பிங் ராணிக்கு 'அங்காடி பரமேஸ்வரி'ன்னு பாஸ்வேர்டு வைத்தது மிகப் பொருத்தமானது.

**சென்னை,** **கே.வி.ராமன்**

கலைஞரின் மகள், 'சிதையின் மகள்கள்' மூலம் இன்றைய 'மகள்களின்' சமூக நிலைப்பாட்டினை கவிதையாய் வடித்து, கண்ணீர் வடிக்க வைத்துவிட்டார்.

**உசிலம்பட்டி,** **எஸ்.கருணையானந்தம்**

'கல்கி'யின் கட்டுரைக்கு மியூசிக் அகடமியின் சார்பாக எம்.எஸ்.வெங்கட்ராமனின் பதிலைப் படித்தேன். என்னளவில் விருப்பு வெறுப்புகளுக்கு இடமில்லை. ரசிகர்களின் சார்பாகச் சொல்ல விரும்புகிறேன்.

"நாங்கள் தவறுகளே செய்யவில்லை என்று சொல்லவில்லை. ஆனால் அந்தத் தவறுகள் குற்றங்கள் அல்ல. அந்தத் தவறுகளைச் சரி செய்ய வேண்டும் என்று அரசு கூறியபோது சரி செய்திருக்கிறோம்'' என்று விளக்கப்பட்டுள்ளது.

அகடமி உறுப்பினர்கள் எதிர்பார்ப்பது தவறுகளுக்கு இடங் கொடாத நிர்வாகம். செய்தவை தவறுகள், ஆனாலும் குற்றங்கள் அல்ல என்கிற ஒப்புதல் வாக்குமூலம் அல்ல.

- ஆர்.நடராஜன்
சென்னை - 17




# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**
**மு. மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.390/-
ஆறு மாதம் : ரூ.195/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 63.50யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2060/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேஜைக்கு

**'கள்வனின் காதலி', 'வல்லவன்', 'தலைமகன்' என பிஸியாக வலம்வரும் நயன்தாரா, அஜித்துடன் நடிக்க மறுத்தார் என்று குற்றச்சாட்டு. 'ஈ' படப்பிடிப்பில் வசமாகச் சிக்கினார். நம் கேள்விகளுக்குப் பதிலளித்தார்.**

**ரஜினியுடன் புடைவை முகியாக கலக்கினீங்க; கஜினியில் கவர்ச்சிமுகி யாக அதிர வெச்சுட்டீங்களே?**

சந்திரமுகி படத்தில் துர்கா கேரக்டருக்கு புடைவைதான் சரி. கஜினியில் மருத்துவக் கல்லூரி மாணவி. அதற்கு மாடர்ன் டிரஸ்தான் கரெக்ட்.

**எந்த ஊரில் மருத்துவக் கல்லூரி மாணவிகள் இத்தனை கவர்ச்சியாக உடையணிந்து ஆடுறாங்க?**

இது சினிமாங்க! இதைப் பொழுது போக்கா மட்டும் எடுத்துக்கோங்க! டோன்ட் பி சீரியஸ்.

**ஒரு நடிகையாக உங்களுக்கு சமூகப் பொறுப்பு இல்லையா?**

நிறைய இருக்கு! எய்ட்ஸ் விழிப்புணர்வு, டி.பி. ஒழிப்பு இப்படி நிறைய நல்ல விஷயங்களுக்கு காசு வாங்காமல் கலந்துகொண்டு உதவுறேன். இதுதான் சமூகப் பொறுப்புன்னு நான் நம்பறேன்.

**'சந்திரமுகி' படத்தின் இருநூறாவது நாள் விழா மேடையில் கால்மேல் கால் போட்டு அமர்ந்திருந்த நீங்கள், ரஜினி ரசிகர்கள் சத்தம் போட்டதும் ஓடுங்கிட்டீங்களே?**

'கஜினி' படம் பார்த்துட்டு என்ன குண்டாகிட்டீங்கன்னு கேட்கறாங்க. முதலில் ஒல்லியாக இருந்துட்டு இப்போ குண்டாகியிருந்தால் இதை ஒப்புக் கொள்ளலாம். நான் சின்ன வயசிலிருந்தே குண்டுதான். 'ஐயா' படத்துக்கு கூப்பிட்டப்போ, "என்ன இந்தப் பொண்ணு குண்டா இருக்கே!"ன்னாங்க. "எடையைக் குறைச்சா இவ்ளோ அழகா இருக்க மாட்டேன்! ஓகேவா?"ன்னு கேட்டேன். "அய்யோ, வேணாம்"ன்னு அலறிட்டாங்க. என்னோட பாடி லாங்வேஜும் அப்படித்தான். தமிழ் சினிமாவில் சில விஷயங்களை அதிகப்படியா எதிர்பார்க்கிறாங்க. அதை நான் புரிஞ்சுக்கிட்டேன். இதை ஊதிப் பெரிசு பண்ணாதீங்க ப்ளீஸ்!

**'திருப்பதி', 'பரமசிவன்' இரண்டு படத்துலேயும் அஜித் கூட நடிக்க மாட்டேன்னு மறுத்துட்டீங்களாமே?**

அஜித் எவ்வளவு பெரிய ஹீரோ! அவரோடு நடிக்கமாட்டேன்னு சொல்வேனா? எங்கிட்டே தேதிகள் இல்லீங்க! நான் என்ன செய்ய?

**'சிவகாசி'யில் என்ன கேரக்டர்?**

நடிகை நயன்தாராவாகவே நடிக்கிறேன். பிரகாஷ்ராஜ், விஜய் இரண்டு பேரும் 'சிவகாசி' தொகுதியிலே வேட்பாளரா நிக்கிறாங்க!

# "நான் பிரசார பீரங்கி!"

## –தேர்தல் களத்தில் நயன்தாரா

(அய்யோ! இது வைகோவுக்குத் தெரியுமா?) தேர்தல் பிரசாரத்துக்கு திரை நட்சத்திரத்தைக் கூட்டி வந்தா ஜெயிச் சுடலாம்னு பிரகாஷ்ராஜ் சொல்றார். அதுக்கு முன்னால் விஜய் ஆட்கள் முந்திக்கிறாங்க. சிவகாசி தெருக்களில் ஆடிப்பாடி வோட்டு கேட்கிறேன். அதுக்கப்புறம் என்ன நடக்குதுன்னு இயக்குனருக்குத்தான் தெரியும்.

**தமிழ்நாட்டில் அடுத்த வருஷம் தேர்தல். எந்தக் கட்சியாவது கூப்பிட்டால் பிரசாரத்துக்குப் போவீங்களா?**

முதல்ல வோட்டு போடுற வயசு வரட்டும்! (யம்மாடி!)

- ஸ்ரீ



**மொ**ழி என்பது மனிதனின் ஓர் அற்புதமான படைப்பு. மொழி தன் மனதில் உள்ளவற்றை வெளிப்படுத்த உதவும் சாதன மாக ஒரு பக்கம் உள்ளது என்றால், தன் மனதை மறைக்கப் பயன்படும் திரையாகவும் பயன்படுகின்றது. ஆம்... நேரம்கெட்ட நேரத்தில் யாராவது வந்து விட்டார் என்று வைத்துக் கொள்வோம். அவரைப் பார்த்து, 'ஏன் இப்போது வந்தீர்கள்' என்று கேட் போமா? அட.... இப்போதுதான் உங்களைப் பற்றி பேசிக் கொண்டிருந்தோம்.... நீங்களே வந்து விட்டீர்கள்... உங்களுக்கு நூறு வயது' என்போம்.

அது மட்டுமல்ல இனிமைப் பேச்சு கஞ்சி யையும் இனிப்பான அமிர்தமாக்குகிறது. கரடுமுரடான பேச்சு இனிப்பான சர்க்கரைப் பொங்கலையும் எட்டிக் காயாகக் கசக்க வைக்கிறது. ஜுலியஸ் ஸீஸர் என்ற நாட கத்தில், ஆண்டனி என்பவரின் பேச்சுத் திறன் ஆயிரக்கணக்கான மக்களை அப் படியே திசைமாறச் செய்கிறது.

ஆக, மொழி என்பது பல விதங்களிலும் நம்மையும், சமூகத்தையும் ஆட்டிப் படைக் கிறது. வடக்கிலிருந்து வரும் ஒருவர் நம்மைப் பார்த்து வணக்கம் என்று சொன்னால், நம் காதில் தேன் வந்து பாய்வது போல் தோன்று கிறதல்லவா? இதே போல்தான், மற்ற மொழி யாள்களுக்கும் தன் மொழியை மற்றவர் பேசிக் கேட்கும்போது இனிமையான உணர்வு ஏற்படுகிறது. நிற்க.

இதையெல்லாம் ஏன் கூறுகிறோம் தெரி யுமா? தமிழ் நாட்டவர்களுக்கு அறிவு மிக கூர்மை. எனினும், இந்தி மொழி தெரியாத காரணத்தால் அவர்கள் திறமை அகில பாரத அளவில் வெளிப்படாமல் பொசுங்கி உள்ளது. இதை கருத்தில் கொண்டு பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்க பயிற்சி மையம் பேச்சு மொழி இந்தியை அனைவரும் கற்கும் வண்ணம் மிக எளிய முறையில் நடத்தி வரு கின்றது. அகர வரிசை (Alphabets) கூட தெரியாதவர் பலரும் இப்பயிற்சியில் சேர்ந்து ஆறே மாதத்தில் ஹிந்தி மொழி பேசக் கற்று, வட இந்திய பயணத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு வந்துள்ளனர்.

இந்தியிலும், ஆங்கிலத்திலும் பேசும் திறன் பெற்றிருத்தல் இந்நாட்களில் மிக அவசியமாக உள்ளது. இப்போது இந்தியா அகில உலக சந்தையில், தகவல் தொழில் நுட்பத்தில் அதிவேகமாக முன்னேறி வருகின் றது. கம்ப்யூட்டரின் பல்முனைப் பயன்பாடு களை அறிந்திருப்பதோடு, ஆங்கிலத்தில் பேச அறிந்திருப்பது அவசியமாக உள்ளது. அதுமட்டுமின்றி, ஆங்கிலம் பேசத் தெரிந்த வர்களை நாம் சற்று பெருமையுடனோ (அல்லது பொறாமையுடனோ) ஏறெடுத்துப் பார்க்கின்றோம். "என் மனைவி ஆங்கிலம் நன்கு பேசுவார்" என்றும் "என் பிள்ளைகள் ஆங்கிலம் அருமையாகப் பேசுவார்கள்" என்றும் பலர் பெருமையாகப் பேசுவதைப் பார்க்கின்றோம். அது மட்டுமின்றி ஆங்கிலப் பள்ளியில் படிக்கும் நம் குழந்தைகளின் ஆசிரியரிடம் ஆங்கிலத்தில் பேசி அவர்கள் மனதில் இடம் பிடிக்க விரும்புகின்றோம். ஆனால் பல நேரங்களில் ஆங்கிலத்தில் பேசத் தெரியாத காரணத்தால் நாம் சுய பச்சாதாபத்தில் குறுகிப் போய் விடுகிறோம்.

## இந்தி மொழியில் பேசக் கற்று இந்தியா முழுதும் பயணிக்கலாம். ஆங்கிலம் பேசக் கற்று அகிலத்தையும் கைக் கொள்ளலாம் (அஞ்சல் வழிப் பயிற்சி)

ஆங்கிலத்தில் பேசுவதற்கு, ஆங்கில சொற்களஞ்சியத்தை மனப்பாடம் செய்யத் தேவையில்லை. சில சொற்களை, வாக்கியங் களை, பழமொழிகளை லாவகமாக கையாள வேண்டும். இப்படி பேசுவதற்கான பயிற்சி யைப் பெற்று விட்டால் நம்மை மிஞ்ச ஆள் இல்லை. இதற்கான பயிற்சியும் பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்க பயிற்சி மையம் அளிக்கிறது. இப்பயிற்சியில் ஆங்கிலத்தில் ஒரு எழுத்து தெரியாதவர் கூட சேர்ந்து ஆறே மாதத்தில் நல்ல பயிற்சியைப் பெற லாம். ஆங்கில மொழியின் பல அங்கங்களை (சொல், வாக்கியம், செய்தித்தாள் ஆங்கிலம், கவிதை, இலக்கணம் என்ற அனைத்தும்) முறைப் படி கற்பிப்பதால் இப்பயிற்சியில் முறையாகக் கற்பவர்கள் ஆறே மாதத்தில் ஆங்கிலத்தில் சரள மாக பேச முடியும்.

இந்த இரண்டு பயிற்சிகளைப் பற்றிய மற்றைய விபரங்கள் கீழ் வருமாறு:

**பேச்சு மொழி ஹிந்தி டிப்ளமா /**
**பேச்சு மொழி ஆங்கில டிப்ளமா**

1. இப்பயிற்சிகளில் மொழி ஆர்வமுடைய எவரும் சேரலாம். (பள்ளிச் சிறுவர் முதல் ரிடையர் ஆனவர் வரை)

2. பேச்சு மொழி ஹிந்தி பயிற்சி தமிழ்

மூலமாகவும், ஆங்கிலம் மூலமாகவும் நடத்தப்படுகிறது.

3. பேச்சு மொழி ஆங்கிலம் தமிழ் மூலமாகவும், ஹிந்தி மூலமாகவும் நடத்தப்படுகின்றது.

4. அஞ்சல் வழியில் நடத்தப்படுவதால் எங்கிருந்தபடியும் சுலபமாகப் படிக்கலாம்.

5. இரு வழித் தொடர்பு (Two Way Communication) இப்பயிற்சியின் சிறப்பு அம்சமாகும். அதாவது ஒவ்வொரு மாதமும் முதல் வாரத்தில் பாடங்கள் கூரியர் / post மூலம் அனுப்பப்படும். ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் பயிற்சிகள் இருக்கும். இப்பயிற்சிகளைப் பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும். இவற்றை திருத்தி, பயிலுபவர்களுக்குத் திருப்பி அனுப்பி வைக்கப்படும்.

6. ஐந்து நேர்முக வகுப்புகள் (சனி அல்லது ஞாயிற்றுக் கிழமைகளில்) நடத்தப்படுகின்றது. இவ்வகுப்புகளில் அந்த மாதம் அனுப்பிய பாடங்கள் விளக்கப்படுவதுடன் ஹிந்தி மற்றும் ஆங்கில மொழியில் உரையாட (மதிய உணவுடன்) காலை 10.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை பயிற்சியும் அளிக்கப்படுகின்றது.

7. நேர்முக வகுப்புகளுக்கு வர முடியாதவர்களுக்கு உதவியாக (மொழி விளக்க மேம் பாட்டு மையங்கள்) திருச்சி, கோவை, மதுரை, தஞ்சாவூர், தில்லி, ஹைதராபாத், மும்பை, ராஜஸ்தான் போன்ற இடங்களில் உள்ளன. தவிர 15 பேர்களுக்கு அதிகமான எண்ணிக்கையில் மாணவர்கள் உள்ள இடங்களில் மொழி விளக்க நிபுணர்கள் உள்ளனர்.

**8. பேச்சு மொழி ஹிந்தி :** அகர உச்சரிப்பிலிருந்து பலவகை சூழ்நிலைகளில் பேசும் பயிற்சிகளைக் கொண்ட இரட்டை ஒலி நாடாக்கள் (Twin Cassettes) வெளியிடப்பட்டுள்ளன. இவற்றுடன் வழங்கப்படும் துணை நூலை படித்த வண்ணம், ஒலி நாடாக்களைக் கேட்டால் மிக விரைவில் மொழியைக் கற்றுக் கொள்ளலாம். இந்த ஒலிநாடாக்களைப் பெற விரும்புபவர்கள் ரூபாய் 150க்கான டிமாண்ட் டிராப்ட் **SBIOA Institute, Chennai** என்ற பெயருக்கு எடுத்து தனியாக அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

**பேச்சு மொழி ஆங்கிலம்** ஒலிநாடாக்கள் தயாரிக்கப்பட உள்ளன.

9. பயிற்சியில் தேறியவர்களுக்கு வருடா வருடம் நடக்கும் பட்டமளிப்பு விழாவில் "Diploma in Conversational Hindi / Diploma in Conversational English" சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன. இதுவரை ஆற்காடு இளவரசர், முன்னாள் பிரதமர் சந்திரசேகர், பாரத ரத்னா சி. சுப்ரமணியம். டாக்டர் கிரண்பேடி - ஐ.பி.எஸ். பாரத ஸ்டேட் வங்கியின் தலைமைப் பொது மேலாளர் திரு R.C. ஷர்மா, அருட்செல்வர் Dr. N. மஹாலிங்கம், திரு எஸ். குருமூர்த்தி, Chartered Accountant and Eminent Columinist, Dr. V.C. குழந்தைசாமி போன்றவர்கள் இம்மையத்தின் பட்டமளிப்பு விழாவில் முக்கிய விருந்தினராக உரை நிகழ்த்தியுள்ளனர்.


• எட்டாவது பட்டமளிப்பு விழாவின் போது தங்கப்பதக்கம் பெற்ற மாணவர்களுடன் SBIOA Institute, நிர்வாகத்தினர்.

10. பயிற்சி காலம் ஆறுமாதம் (ஜனவரி முதல் ஜூன் வரை, மற்றும் ஜூலை முதல் டிசம்பர் வரை) அடுத்த வகுப்பு ஜனவரி 2006ல் துவங்க உள்ளன.

11. பயிற்சி கட்டணம் ரூ.600/- (ரூபாய் அறுநூறு மட்டுமே) நேர்முகப் பயிற்சி, தேர்வுக் கட்டணம் உட்பட)

ஜனவரி 2006ல் துவங்கவிருக்கும் பயிற்சியில் சேர விரும்புபவர்கள்(ஒவ்வொரு பயிற்சிக்கும் தனியாக ரூ.100 அனுப்ப வேண்டும்) டிமாண்ட் டிராப்ட் அல்லது உள்ளூர் காசோலை (ரூ.100) SBIOA Institute, Chennai என்ற பெயரில் எடுத்து சுய விலாசமிட்ட, தபால் தலையுடன் (ரூ.10) கூடிய உறையில் கீழ்க்கண்ட முகவரிக்கு எழுதவும். உறையின் மேல் பேச்சுமொழி ஹிந்தி அல்லது பேச்சு மொழி ஆங்கிலம் மற்றும் பயிற்று மொழியைக் குறிப்பிட வேண்டும். (இந்த ரூபாய் 100/- பயிற்சிக் கட்டணத்திலிருந்து கழித்துக் கொள்ளப்படும்.)

**The Executive Director,**
**SBIOA Institute,**
**229, N.S.C.Bose Road,**
**P.B.No.1279, Chennai - 600 001.**
**Phone : 044 - 25340226**

Advt



# கொள்ளை போகும் வெள்ள நீர்!

கட்டி முடிக்கப்பட்ட எழுபது ஆண்டுகளில் முப்பத்தி ஐந்தாவது முறையாக நிரம்பியுள்ளது மேட்டூர் அணை. தண்ணீர் தேக்கி வைத்துக் கொள்ளக் கூடிய அதன் பாதுகாப்பான கொள்ளளவான நூற்றியிருபது அடி உயரத்தை, கடந்த நான்கு மாதங்களில் மட்டும் மூன்று தடவை முத்தமிட்டுள்ளது தண்ணீர்.

நூற்றி இருபத்தியொரு அடிக்கு தண்ணீர் தேக்கி வைக்கப்பட்டு, அதிகப்படி நீர் அத்தனையையும் அணையிலிருந்து திறந்து விடப்பட வேண்டியதாயிற்று. அதன் விளைவாக, காவிரி டெல்டா மாவட்டங்கள் ,வெள்ள நீர்த் தேக்கங்களாய் மாறியுள்ளன.

பெரும் மழை மற்றும் வெள்ள அபாயக் காலங்களில் கொள்ளிடம் ஆற்றில் பிரம்மாண்ட அளவில் கரை புரண்டு ஓடுமளவுக்குத் தண்ணீர் திறந்து விடப்படுகிறது.

வினாடிக்கு சுமார் மூன்றே கால் லட்சம் கன அடி தண்ணீரை, தன் இருபுறக் கரைகளுக்குள்ளாக தாங்கிக் கொள்ளக் கூடிய தன்மை உடையது கொள்ளிடம் ஆறு. முக்கொம்பிலிருந்து துவங்கும் கொள்ளிடம் ஆறு, கல்லணையை ஒட்டி கீழணை எனச் சொல்லப்படும் அணைக்கரை வரை நீண்டு செல்கிறது. கரைபுரண்டு ஓடும் அத்தனை பெருவெள்ளமும், கொள்ளிடம் ஆற்றில் நூற்றிப் பத்து கி.மீ. தூரம் பயணம் செய்து கடைசியாக கடலிலே போய்க் கலந்து விடுகிறது. இதில், இடையிலே வடவாறு வாய்க்கால் மூலமாக வீராணம் ஏரி நிரம்புகிறது. இது ஒன்றைத் தவிர தண்ணீர் அவ்வளவும் வீணாகக் கடலிலே தான் போய்க் கலந்து விடுகிறது.

இது ஒவ்வொரு முறையும் வெள்ளக் காலங்களில் நிகழ்கின்ற ஒரு சடங்கு









போல ஆகியுள்ளது. ஒரு வாரங்கழித்துச் சென்று பார்த்தால், அதன் உட்பகுதி முழுவதுமாக வெட்டவெளி மணல் பரப்பு மட்டுமே கண்களுக்குத் தெரியும். சரி. இதற்கு என்ன தான் செய்வது?

**கா**விரியின் நீளம் மேட்டூர் அணையிலிருந்து கல்லணை வரைக்குமாக 211கி.மீ. தூரம். மேட்டூருக்கும் கல்லணைக்கும் இடையே சுமார் 450 அடி தள மட்டம் தாழ்ந்து ஓடி வருகிறது காவிரி. இந்தத் தள மட்டச் சரிவினை நீர்மின் உற்பத்திக்கு, கதவணைகள் வாயிலாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். அதே நேரத்தில் பாசனப் பகுதிகள், இரு கரையோரக் குடியிருப்புப் பகுதிகள் பெரும் மழை வெள்ளக் காலங்களில் பாதிப்புக்கு உள்ளாகாதபடி மேட்டூரிலிருந்து மாயனூர் கட்டளை வரைக்குமாக 135 கி.மீ. தூரத்திற்குள் பதினோரு இடங்களில் கதவணைகள் கட்டத் திட்டமிடப் பட்டுள்ளன.

கதவணைகள் ஒவ்வொன்றும் ஒன்பது மீட்டர் உயரம். இவற்றில் நான்கு இடங்களில் (அதாவது செக்கானூர், நெருஞ்சிப்

**–ஷாக் ரிப்போர்ட்!**

பேட்டை, கோனேரிப்பட்டி, ஊராட்சிக் கோட்டை) கதவணைகள் கட்டி முடிக்கப்பட்டு, பயன்பாட்டில் இருந்து வருகின்றன. இவை ஒவ்வொன்றிலும் நீரோட்டத்தின் விசைக்கேற்ப பதி னைந்திலிருந்து இருபத்தைந்து மெகாவாட் மின்சாரம் உற்பத்தி செய்யப்பட்டு வருகிறது. மேற்கண்ட நான்கு கதவணை களிலிருந்து கடந்த பதினைந்து வருடங் களில் கிடைக்கப் பெற்ற நீர்மின் உற்பத்தி மூலமாக, அவற்றின் கட்டுமானச் செலவுகள் மற்றும் அத்தொகைக்கான வட்டியையும் முழுமையாக ஈட்டித் தந்து விட்டது. தற்போது அவற்றின் நீர்மின் உற்பத்தி மூலமாகக் கிடைத்து வரும் வருவாய் ஆனது, தற்போதைய பரா மரிப்புச் செலவுகள் போக முழுவதுமே நிகர லாபமாகக் கிடைத்து வருவது குறிப் பிடத்தக்கது.

தற்சமயம் காவிரியின் குறுக்கே அக்ர

## பொடிக்கல் மூளை

எட்டுக்கால் பாய்ச்சலில் மருத்துவம் முன்னேறிக் கொண்டிருந்தாலும், மூளை யைப் பற்றி புதிதாக எதையும் கண்டு பிடிக்க முடியவில்லை. ஸ்கேனிங் அறிமுகப்படுத்தப்பட்ட பொழுது மனச்சிதைவு போன்ற நோய்களைத் தீர்த்து விடலாம் என்று நம்பினர். ஆனால் 30 ஆண்டுகளுக்குப் பிறகும், எந்தவித குறிப்பிடத்தக்க முன்னேற்ற மும் ஏற்படவில்லை.



ஹாரம், சமயசங்கிலி மற்றும் பாசூர் ஆகிய மூன்று இடங்களில் கதவணைகள் கட்டப்பட்டு வருகின்றன. மேலும் பல இடங்களில் காவிரியில் கதவணைகள் கட்டப்பட வேண்டியுள்ளது.

"பொதுவாகவே கதவணைகள் ஆங் காங்கு தண்ணீர் சேமிப்புக் கிடங்குகளாக பயன்பட்டு வருபவைகள் ஆகும். பெரும் மழை, வெள்ள அபாயக் காலங்களில் அவற்றின் பங்கு மகத்தானது. முழுமை யாக வெள்ளம் வடிந்தோடிய பின்னர், ஆற்றின் உள் பகுதியை காலி பெருங்காய டப்பாவாக வைத்துக் கொள்ளாமல் கதவணைப் பகுதிகள் ஒவ்வொன்றும், அவற்றின் உயரத்துக்கு தகுந்தளவு நீர்த் தேக்கங்களாகக் காட்சியளிக்கும். காவிரியிலும் கொள்ளிடத்திலும் கத வணைகள் கட்டி முடிக்கப்படுவதன் மூலமாக கொள்ளை போகும் வெள்ள நீரை அதனதன் ஆற்றுப் படுகைகளுக் குள்ளேயே சேமித்துக் கொள்ளலாம். காவிரியில் கட்டி முடிக்கப்பட வேண்டிய மீதமுள்ள கதவணைகளுக்கு, மத்திய அரசு மூலமாக தடைக்கல் ஒன்று வந்து விழுந் துள்ளது. காவிரி நடுவர் மன்றத்தின் இறுதித் தீர்ப்புக்குப் பின்னரே காவிரியில் கதவணைகள் கட்டப்பட வேண்டும் என்று உத்தரவு. காவிரி நடுவர் மன்றத்தின் இறுதித் தீர்ப்பு எப்போது கிடைக்கும் என்பது இறைவனுக்கு மட்டுமே தெரியும்!" எனக் கூறுகிறார் திருச்சி மாவட்ட காவிரி நீர்ப்பாசன விவ சாயிகள் நலச் சங்கத்தின் செயல் தலை வர் மகாதானபுரம் வி.ராஜாராம்.

முக்கொம்பிலிருந்து துவங்குகிற கொள்ளிடம் ஆறு, அணைக்கரை வரை சுமார் நூற்றிப் பத்து கி.மீ. தூரம் பயணம் செய்கிறது. இவற்றில் பதினைந்து கி.மீ. தூரத்துக்கு ஒன்றாக ஏழு இடங்களில் கதவணைகள் கட்டப்படலாம். ஏழரை மீட்டர் உயரத்துக்கு கட்டப்பட வேண்டிய அந்தக் கதவணைகள், சுமார் 25 அடி உயரத்துக்குத் தண்ணீரைச் சேமித்து வைத்துக் கொள்ளும் நீர்த்தேக் கங்களாக அமைந்து விடும்.

கொள்ளிடம் ஆற்றில் மட்டும் நொச்சி யம், கூகூர், திருமழபாடி, ஏலாக்குறிச்சி,

காமரசவல்லி, கோடாலி கருப்பூர் மற்றும் அணைக் கரைக்கு மேலே என மொத்தம் ஏழு இடங் களில் கதவணைகள் கட்டப் பட்டிருக்குமே யானால், சமீபத்திய வெள்ள நீர் முற்றிலு மாகக் கடலில் சென்று கலப்பது தடுக்கப்பட்டி ருக்கும். இன்னும் நான்கு நாட்கள் கழித்து பெருமளவு நீரோட்ட மின்றி வெறிச்சோடி தோற்றமளிக்கப் போகிற கொள்ளிடம் ஆறு. அத்தனை பெரு வெள்ளத்தையும் கடல் பரப்பின் உள்ளே பறி கொடுத்திருக்கும்.

• காவேரி ஆற்றுப்படுகை - கடைமடை பாசனப்பகுதி

• வீ. ராஜாராம்

• என். நடராஜன்

கொள்ளிடத்தில் கதவணைகள் கட்டப்படுவதன் மூலமாக, ஆற்றின் இரு புறமும் பாசனப் பகுதி மேம்பாடு அடையும். சாலைப் போக்குவரத்து உருவாகும். இதனால் எரிபொருள் மிச்சமாகும். கதவணைப் பகுதிகளில் தேங்கும் நீரினால், கரையின் இருபுறங் களிலும் நிலத்தடி நீர் இருப்பு மேலும் உயரும். குறிப்பாக சென்னைப் பெருநகர் வரைக்கும் நல்ல குடிதண்ணீரை அள்ளி வழங்குகின்ற காமதேனுகளாக கதவ ணைகள் அமைந்து விடும்.

"பொதுவாகவே கொள்ளிடம் ஆற்றை, நமக்குக் கிடைத்து இருக்கும் ஒரு மாபெரும் வடிகால் கருவியாகவே பயன்படுத்தி வருகிறோம். கொள்ளிடம் ஆற்றில் ஏழு இடங்களில் கதவணைகள் கட்டுவதன் மூலமாக, ஒவ்வொரு முறையும் கடலை நோக்கி கொள்ளை போகும் வெள்ள நீரில் ஒரு பகுதியினை அந்தந்த கதவணைப் பகுதிகளில் சேமித்துக் கொள்ளலாம். கொள்ளி டத்தில் எங்கெங்கு கதவணைகள் அமைக் கப்பட வேண்டுமென ஒரு வரைபடம் வரைந்து அனுப்பிவைத்து தமிழக அரசிடம் சில ஆண்டுகளாகவே கோரி வருகிறோம்!" என்கிறார் தமிழ்நாடு அரசு, பொதுப்பணித் துறையின் முன்னாள் மேற்பார்வைப் பொறியாளரும், காவிரி நீர்ப்பாசன விவசாயிகள் நலச் சங்கத்தின் தொழில்நுட்ப ஆலோசகருமான பொறி யாளர் என். நடராஜன்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

மழையோ, புயலோ...

சூடுபறக்குது சூப்பர் மலர்!



கல்கி

தீபாவளி மலர் '05

உனக்காக
கர்நாடகத்துடன் போராடி
தண்ணீர் கொண்டாந்துட்டேன்
பாரு....

மராமத்துப் பணிகளில்
சுணக்கம்...

## தலைக்கு மேல் வெள்ளம்...!

'தலைக்கு மேல் வெள்ளம் போன பிறகு சாண் போனால் என்ன, முழம் போனால் என்ன?'

- காவிரியில் பெருகியோடும் வெள்ளத்தைப் பார்க்கையில் இந்தச் சொல் வழக்கைத்தான் துயரத்தோடு நினைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது!

ஒரு பக்கம் தமிழக அரசு மக்கள் நலத் திட்டங்கள் என்ற பெயரில் கோடிக் கணக்கான ரூபாய் வரிப்பணத்தை உற்பத்திக்கு உதவாத செலவினங்களுக்குத் திடீரென்று திசை திருப்பிக் கொண்டிருக்கிறது. இந்த 'நலத் திட்டச்' செலவுகளும் அரசு ஊழியர்களுக்கும் பணியாளர்களுக்கும் வழங்கப்படுகிற திடீர் மானிய, ஊதிய உயர்வு, சலுகை, சம்பள உயர்வு செலவுகளும் சேர்ந்து, வெள்ளத்தைப் போலவே மிதமிஞ்சிப் போய்விட்டன! அடுத்த நிதியாண்டில் ஆட்சியில் அமரப் போகும் அரசு நிதிப்பற்றாக்குறையினால் திண்டாடப்போவது உறுதி. மீண்டும் மக்கள்மீது வரிச்சுமையை அதிகரிக்கப் போவதும் உறுதி.

தேர்தலை மனத்தில் கொண்டு செய்யப்படும் இந்தச் செலவுகளையும் (முதல்வர் மறுத்தாலும் இதுதான் உண்மை என்பதைச் சிறுபிள்ளையும் அறியும்.) நலத் திட்டங்களையும்தான்



**கல்கி**



2005 நவம்பர் 6
பார்த்திப ஐப்பசி 20
மலர் : 64
இதழ் : 14

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




மக்கள் நினைவில் வைத்துக் கொண்டு வோட்டுப் போடுவார்களா...?

அவ்வளவு திட்டங்களின் நினைவுகளையும் சேர்த்து அடித்துக்கொண்டு போய்விடும், காவிரியில் இப்போது தோன்றியுள்ள வெள்ளம்! இந்த வெள்ளத்தின் விளைவும் சேதத்தின் சோகமும்தான் மக்கள் மனங்களை ஆக்கிரமிக்கும்!

கடந்த பல ஆண்டுகளாக, கர்நாடகாவிடமிருந்து நம் குறைந்தபட்ச தேவைக்கான தண்ணீரைக் கூடப் பெற்றுத்தர முடியவில்லை தமிழக அரசினால், இந்த ஆண்டோ கர்நாடகாவில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டதால் அத்தனை உபரிநீரையும் ஒரு சேர தமிழகத்துக்குள் விட்டுவிட்டது தரம்சிங் அரசு! உரிய நீர் மறுக்கப்பட்ட காலத்திலும் நாம் கையைப் பிசைந்துகொண்டு நின்றோம்; இப்போது உபரி நீருடன் பருவமழைப் பெருக்கும் காட்டாற்று வெள்ளமும் சேர்ந்து ஊரை மூழ்கடிக்கிற நேரத்திலும் கையைப் பிசைந்து கொண்டு நிற்கிறோம்!

வெள்ளத்தை எதிர்பார்க்கத் தவறிய பொதுப்பணித் துறையும் அந்தந்த மாவட்ட நிர்வாகங்களும் திகைத்துப் போய் நிவாரணப் பணிகளைத் தாமதப்படுத்தியது முதல் கொடுமை.

பொழிகின்ற காலத்தில் நீரைச் சேமிக்க வழியின்றி இப்போது ஏராளமான மழைநீரும், ஏரி, குள, ஆற்று நீரும் கடலுக்குள் கலக்க அனுமதிக்கப்படுவதும், ஊர்க் குடியிருப்புகளில் வெள்ளத்தைக் தவிர்க்க கடலுக்குள் நீர் திசை திருப்பி விடப்படுவதும் மிகக் கொடுமை.

இன்னும் ஆறே மாதங்களில், வெய்யிலின் கொடுமையால் காவிரிக் கரையின் இதே ஊர்களில் தண்ணீர்ப் பஞ்சமும் விவசாய நீர்ப் பற்றாக்குறையும் தலைவிரித்தாடுவதை நாம் பார்க்கத்தான் போகிறோம்.

இந்த நிலைமைக்கு இயற்கைச் சீற்றம் மட்டுமே காரணம் அல்ல...

கோடிக்கணக்கான ரூபாய்களை உற்பத்தியற்ற செலவினங்களில் கொட்டுவதற்குப்




பதிலாக, காவிரிப் பாசனப் பகுதியின் நீர் நிலைகளையும் கால்வாய், கரைகளையும் மராமத்துச் செய்யச் செலவிட்டிருந்தால், இன்று தமிழகம் இத்தனை பெரிய வெள்ளப் பெருக்கினால் அவதிப்பட்டுக் கொண்டிருக்காது. வருடக் கணக்காகத் தூர்வாரப்படாமல் இருக்கும் கால்வாய்கள், பலப்படுத்தப்படாமல் நலிந்திருக்கும் ஆற்றங்கரைகள், திருட்டு மணல் அகழ்வுக்கு உட்படுத்தப்பட்டு அரசியல் ஆதாவுடன் சூறையாடப்பட்ட ஆற்றுப் படுகைகள், விவசாய நிலங்களில் ஆற்றங்கரைகளிலும் ஏரி-குள பகுதிகளிலும் எழுவதற்கு அனுமதிக்கப்பட்ட குடியிருப்புகள், இந்த அநீதிகளைச் சாத்தியமாக்கும் லஞ்ச லாவண்யங்கள் - இவை எல்லாமே வெள்ளப் பெருக்கு கட்டுக்கடங்காமல் போகக் காரணமாயிருந்திருக்கின்றன.

தண்ணீர் இல்லாத காலங்களில் ஆற்றுப் படுகைகளிலும் நீர் நிலைகளிலும் தாவரங்கள் வளர்ந்து நிரம்பி மண்டிவிடுகின்றன. அவற்றை நீக்கி, படுகைகளை ஆழப்படுத்தி, கரைகளை பலப்படுத்தி வைத்துக் கொண்டால், பொழிகிற காலத்தில் வெள்ள அபாயம் குறையும்; நீர் வீணாக வழிந்தோடி கடலில் கலப்பது தவிர்க்கப்படும்.

இந்த மராமத்துப் பணிகள் உள்ளூர் மக்களுக்குக் கௌரவமான வேலை வாய்ப்பையும் கொடுத்து விவசாயப் பணி இல்லாத காலங்களில் அவர்கள் வயிறு நிரம்பவும் வழி செய்யும்.

ஆனால், இத்தகைய உருப்படியான திட்டங்களையெல்லாம் நலத்திட்டங்களாகக் கருதும் நுண்மதியை இன்றைய அரசியல் கலாசாரம் தொலைத்துவிட்டது.

இலவச வெள்ளம், மானியப் பெருக்கு, சலுகை உடைப்பு என்று மக்களைப் பணபலத்தில் மூழ்கடிக்கும் காட்டாற்று அரசியல்தான் கோலோச்சுகிறது. காட்டாற்று வெள்ளம், வந்த சுவடில் மறைந்துபோகும் என்பதை மக்கள் விரைவில் உணருவார்கள்.

மராமத்துப் பணிகளே மெய்யான நலத்திட்டங்கள் ; விவசாயிகளின் நலனும் வேலை வாய்ப்புப் பெருக்கமும்தான் நலப் பணிகள் என்பதை என்றுதான் அரசு உணருமோ! ●



# அன்பே வா!

ரேஷன் கடையில க்யூ பார்த்திருக்கோம். ஃபேமிலி கோர்ட்டாண்ட க்யூ பார்த்திருக்கிங்களா? கட்டிய தாலிய எட்டாவது நாளே அத்துவிடச் சொல்லி, இளைய தலைமுறையினர் கோழிச்சண்டை போடுறதை கில்லி மாதிரி கதை பண்ணியிருக்காரு செல்வபாரதி.

விஜய் என்கிற மெகா ஸ்டாரை வைத்து இரண்டு சூப்பர் ஹிட்டு கொடுத்தவர், சீரியஸான ஒரு கதையில், புதிய முகங்களை நடிக்க வெச்சிருக்குற தில்லு, சரியானதொன்னு.

நம்ம விவேக்கை அமுக்கி, கதையை அவரு தலைமேலே தூக்கி வெச்சுடுறாரு. சின்னக் கலைவாணரும் தின்ன ஷோக்கான தீனி கிடைச்ச ஜோருல, கதையை சூப்பரா சுமக்கிறார்.

ஹீரோ (தென்றல்), ஹீரோயின் (ஸ்ரீதேவிகா) இரண்டு பேருமே பசையான வீட்டுப் பிள்ளைங்க. ரெண்டு பேரோட சுதந்தரத்துக்கும் நிறைய ஸ்பீடு பிரேக்கு போடுறாங்க. கல்யாணம் பண்ணிக்கிட்டாலாவது கொடுமைக்கார அப்பா, அம்மா கிட்டேயிருந்து தப்பிக்கலாமுன்னு முடிவு பண்றாங்க. கல்யாணம் முடிஞ்சு வந்த பிறகுதான் தெரியுது. அப்பா, அம்மா டார்ச்சரே தேவலைன்னு. அப்புறம் டைவர்ஸ் கேட்டு பிரிய நினைச்ச ஜோடி, எப்படி ஒண்ணு சேருதுன்னு கதைய முடிக்கிறாரு டைரக்டரு.

ஹீரோவுக்கு, அவரு வயசுக்குச் சமமா ஒரு தாய்மாமா இருக்காரு. ஸ்கூல் டைமுலேயிருந்து கையைப் பிடிச்சு கூட்டிக்கிட்டுப் போய் வழிகாட்டுறான்னு லாஜிக்கோட காட்டுறதுனாலே விவேக் கேரக்டர் சோக்கா எடுபடுது. படம் முழுக்க ஒரே விவேக் ராசாங்கம்தான் போங்க. அப்பால அந்த அறிமுக ஹீரோ தென்றலு, பேருக்குத் தகுந்தாப்புலே 'பலே' போட வெக்கிறார். சண்டை போட கத்துக்கிட்டா பொழச்சுக்கிறலாம். நல்லா போய் கிட்டிருக்கிற படத்துல, இருபத்து நாலு மணி நேரத்துல விவாகரத்து வாங்கித் தரேன்னு ஒரு டுபாக்கூர் வில்லன் இன்னத்துக்கு? படம் முடியுற நேரத்துலே எதுக்கப்பா கழனிப் பானையில கையை விட்டீங்க.

- லஜ்ஜாவதி

# அரசு ஊழியர் மாநாடு திடீர் ஒத்திவைப்பு!

"என்னன்னு தெரியலப்பா... திடுதிப்புன்னு மாநாட்டை அம்மா ஒத்திவெச்சுட்டாங்க... என்ன மேட்டர்னு உனக்குத் தெரியுமா...?". இதுதான் அரசு ஊழியர்கள் ஒருவருக்கொருவர் கேட்டுக் கொள்ளும் கேள்வி.

அக்டோபர் 22ஆம் தேதி நடத்தப்படுவதாக இருந்த அரசு ஊழியர்களின் பொது மாநாடு, திடீரென ஒத்திவைக்கப்பட்டதும் அதற்கு அரசுத் தரப்பில் கூறிய காரணமும் பல்வேறு சந்தேக விதைகளைத் தூவியுள்ளன. இந்த ஒத்தி வைப்பின் பின்னணியில், பல கோடி ரூபாய் ஊழல் வழக்கில் சிக்கியுள்ள சூரிய மூர்த்தி முன்னிலையில் கலந்து கொள்வதை முதல்வர் விரும்பவில்லை; கட்டாய வசூல் நடத்தியதால் ஏற்பட்ட அதிருப்தியில், மாநாட்டுக்கு வராமல் அரசு ஊழியர்கள் புறக்கணிப்பார்கள்; தேர்தல் நெருங்கும் சமயம் மாநாடு கூடினால், அப்போது அறிவிக்கப்படும் சலுகை அறிவிப்புகள் ஆளும் கட்சிக்கு வரும் தேர்தலில் நற்பலன்களைத் தரும் - ஊழியர்கள் மத்தியில் இது போன்ற பல யூகங்கள் நிலவுகின்றன.

இதெல்லாம் எந்த அளவுக்கு உண்மை, இந்த மாநாடு திடீரென ஒத்திவைக்கப்பட்டதன் நிஜ பின்னணி என்ன என்பதைப் பற்றியெல்லாம் தெரிந்து கொள்ள, தமிழ்நாடு அரசு ஊழியர் சங்கத்தின் பொதுச் செயலாளர் முத்துசுந்தரத்திடம் பேசினோம். அவர் தந்த தகவல்கள் மேலும் அதிர்ச்சியூட்டுவதாக இருந்தன.

"முதலில் இந்த மாநாட்டை 'பொது மாநாடு' என்ற பெயரில் நடத்தவிருப்பதே தவறு. ஏனென்றால், அரசுக்கு ஆதரவாகத் தொடர்ந்து செயல்பட்டு வரும் ஐந்தாறு சங்கங்கள் மட்டுமே இதில் கலந்து கொள்வதாக இருந்தன. ஏறக்குறைய ஒன்றேகால் லட்சத்திற்கும் அதிகமான உறுப்பினர்களைக் கொண்ட எங்களுக்கு, இந்த மாநாட்டில் உடன்பாடு இல்லை. இதற்குப் பல்வேறு காரணங்கள் உள்ளன. முதலாவதாக, இந்த மாநாட்டில் அரசுக்கு நன்றி தெரிவிக்கப்படும் என்ற வகையில் தயாரிப்புகள் இருந்தன. ஏற்கெனவே அனுபவித்ததை இழந்து தவிக்கும் நிலை

**-பகீர் பின்னணி!**

யில், அரசுக்கு நன்றி தெரிவிக்கும் சூழ்நிலை தற்போது இல்லை. அடுத்து மாநாட்டிற்கான கட்டாய வசூல், மாநிலம் முழுவதும் அரசு ஊழியர்களிடம் முறைகேடாக நடத்தப்பட்டுள்ளது. எனக்குக் கிடைத்த தகவல்படி, சுமார் மூணரை கோடிக்கு மேல் ரசீதுகள் அச்சடிக்கப்பட்டு, பெருமளவு பணம் வசூலிக்கப்பட்டுள்ளது. சில மாவட்டங்களில் அதிகாரிகளின் தூண்டுதலால் சம்பளத்தின் போதே மாநாடு நிதி பிடித்தம் செய்யப்பட்டுள்ளது. இந்த வசூலுக்கென அலுவலக தபால் மூலம் கடிதமே ஊழியர்களுக்கு முறைகேடாக அனுப்பப்பட்டுள்ளது. இதனால் அரசு ஊழியர்கள் பெருமளவில் அதிருப்திக்கு ஆளாகியுள்ளனர். குறிப்பாக இந்த மாநாட்டிற்கு வருவாய்த் துறை, வணிகவரித்துறை, கருவூலத்துறை மற்றும் ஒட்டுமொத்த கல்வித்துறை அரசு ஊழியர்கள் வர மாட்டார்கள் என்ற தகவல்கள் உளவுத்துறை மூலமாக முதல்வர் காதுக்கு எட்டவே, இந்த மாநாடு ஒத்தி வைக்கப்பட்டுள்ளது'' என்றவரிடம்,

''இந்த மாநாட்டில் அரசு ஊழியர்களுக்கு பல்வேறு சலுகைகள் அறிவிக்கப்பட இருந்ததாமே...'' எனக் கேட்டோம்.

''பறிக்கப்பட்ட சலுகைகளைத் திரும்பத் தரும் அளவுக்கு அரசுக்கு மறுசிந்தனை வந்திருந்தால், அது வரவேற்கத்தக்கதுதான். ஆனால் அதனைச் செயல்படுத்தத் தேர்வு செய்த கால-நேரம்தான் சரியானது அல்ல. ஒரு வேளை அரசு சலுகைகளை அறிவிக்கும் என்றாலும், அது வெறும் சில்லறை அறிவிப்புகளாக மட்டுமே இருக்கும். ஒட்டுமொத்த இழப்பை ஈடுகட்டும் வகையில் இருக்காது. அப்படியே சலுகைகள் திரும்பத் தரப்படுகின்றன என்றால், அது முறையான பேச்சுவார்த்தைகள் மூலம்தான் நடத்தப்படவேண்டுமே தவிர, ஒரு நாள் மாநாட்டில் தேர்தல் வாக்குறுதி போன்று அறிவிப்பது குறுக்குவழி'' என்று முடித்துக் கொண்டார்.

• முத்துசுந்தரம்



ஒருவேளை, மாநாட்டுக்குக் கூட்டம் பெருமளவு வராதபட்சத்தில், மகளிர் சுய உதவிக் குழுக்களை வரவழைத்துச் சமாளிக்கும் முயற்சியை சில சங்கங்கள் மேற்கொண்டதாகக் கூறப்படும் நிலையில், குற்றச்சாட்டுகளுக்குப் பதில் வேண்டி தமிழ்நாடு அரசு அலுவலர் ஒன்றியத்தின் தலைவர் சூரியமூர்த்தியைச் சந்தித்தோம்.

''இந்த மாநாடு தமிழ்நாடு அரசு அலுவலர் ஒன்றியத்தின் 56-வது பொது மாநாடு மற்றும் அரசு ஊழியர்களின் பொது மாநாடு என்று அறிவிக்கப்பட்டது. கூட்டுமன்றக் கூட்டத்தில் கலந்து கொள்ளும் தகுதியுடைய அனைவரும் இதற்கு ஆதரவளித்தார்கள். ஆகவே இந்த மாநாட்டில் கிட்டத்தட்ட ஆறு லட்சம் ஊழியர்கள் கலந்து கொள்வார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் வானிலை ஆய்வறிக்கையின்படி மாநாடு நடக்கும் நேரத்தில் புயல்-மழைக்கு வாய்ப்புள்ளதாக அறிவிக்கப்படவே, வேறு வழியின்றி முதல்வர் இந்த மாநாட்டை டிசம்பர் 3-க்கு

''மூணரை கோடிக்கு மேல் ரசீதுகள் அச்சடிக்கப்பட்டு, பெருமளவு பணம் வசூலிக்கப்பட்டுள்ளது''

## "அரசு ஊழியர் நலன் மீது அக்கறையற்ற அமைப்புகளின் பொய்க் குற்றச்சாட்டு"



• சூரியமூர்த்தி

ஒத்தி வைத்தார். இந்த ஒத்திவைப்புக்கும் கட்டாய வசூலுக்கும் எவ்விதத் தொடர்புமில்லை. ஏனென்றால் கட்டாய வசூல் எங்குமே நடைபெறவில்லை. அரசு ஊழியர்கள், மாநாட்டிற்கென மனமுவந்துதான் நிதி அளித்தனர். இந்தக் குற்றச்சாட்டு அரசு ஊழியர் நலன் மீது அக்கறையற்ற அமைப்புகளின் பொய்க் குற்றச்சாட்டு. உண்மையில் இந்த மாநாட்டில் நாங்கள் வைத்த 56 முக்கிய கோரிக்கைகளில் பெரும்பாலானவை நிறைவேற்றப் படுவதாக இருந்தன. அப்படி நிறைவேற்றப்பட்டால், எங்கே அனைத்து அரசு ஊழியர்களும் அரசுக்கு ஆதரவாகத் திரும்பி விடுவார்களோ என்ற அச்சத்தில் இப்படி பேசித் திரிகின்றனர்.

"எங்களைக் குற்றம் சாட்டும் சங்கங்கள் குறைந்த எண்ணிக்கை கொண்ட சிறுசிறு குழுக்கள். இவர்கள் வசூலிக்கும் பணத்திற்கு, அரசுக்கு கணக்கு காட்டத் தேவையில்லை. ஆனால் நாங்கள் ஆண்டுதோறும் அரசுக்கு கணக்குத் தரவேண்டும். ஆகவே கட்டாய நிதி வசூல் சாத்தியமற்றது. மற்றபடி கூட்டம் கூடாது என்றெல்லாம் மாநாடு ஒத்திவைக்கப்படவில்லை. உளவுத்துறையும் இதில் சம்பந்தப்படவில்லை. மாநாடு அறிவித்து விட்டோமே... கட்டாயம் கலந்து கொள்ள வேண்டும் என்று மரபு சார்ந்து சிந்திக்காமல், புயல், மழையால் அரசு ஊழியர்கள் பாதிக்கப்படக் கூடாது என்று முதல்வர் உணர்வு ரீதியாகச் சிந்தித்து இந்த மாநாட்டை ஒத்திவைத்துள்ளார்.

"ஆகவே முதல்வர் அறிவித்தபடி டிசம்பர் 3-ல் மாநாடு நடக்கும்... சலுகைகள் கிடைக்கும். இந்த ஊழல் குற்றச்சாட்டுகள் ஆதாரமற்ற வெற்றுக் கூச்சல்கள்."

இவர்கள் இப்படிக் கூறினாலும், அரசின் கடந்த கால அதிரடி நடவடிக்கைகளால் ஏற்பட்ட காயத்துக்கு இந்த மாநாடு மூலம் மருந்தளிக்க நினைத்த அரசுக்கு, இந்த மாநாடு ஒத்தி வைப்பு ஒரு சறுக்கல்தான். ஒருவேளை எவ்வித இடையூறும் இன்றி டிசம்பர் 3-ல் மாநாடு நடத்தப்படுமேயானால், அதைச் சரியான வாய்ப்பாகப் பயன்படுத்தி முடிந்தவரை சலுகை அறிவிப்புகள் செய்து, அரசு ஊழியர்களின் அதிருப்தியை நீக்கி, ஆளும் கட்சிக்கு ஆதரவாகத் திருப்பும் முயற்சியில் ஈடுபட்டு வருகின்றன அரசுக்கு ஆதரவான சங்கங்கள். மழை விட்டாலும் தூவானம் விடவில்லை என்பது போல, ஒரு பக்கம் அரசுக்கு ஆதரவான சங்கங்கள் மற்ற சங்க உறுப்பினர்களின் மனத்தைக் கரைக்கும் முயற்சியிலும் அரசுக்கு எதிரான சங்கங்கள் சூரியமூர்த்திக்கு எதிராக மேலும் ஆதாரங்கள் திரட்டும் முயற்சியிலும் மும்முரமாக ஈடுபட்டுள்ளன.

- இரா. முத்துக்குமார்

படங்கள்: ராஜன்

நான் இந்தத் துறைக்கு வந்த புதிதில், 1962-க்குச் சற்று முன்னால், அரியக்குடி, ஜி.என்.பி., மதுரை மணி, செம்பை மாலி, ஆலத்தூர் சகோதரர்கள் என்று எல்லா பெரிய இசைக் கலைஞர்களுக்கும் வாசித்துக் கொண்டிருந்தேன். ஆனால் ரொம்ப நாளாகவே, எம்.எஸ். அம்மாவுக்கு வாசிக்க வேண்டும் என்று எனக்கு ஓர் ஆசை. ஆனால் அதற்கு நேரம்தான் கூடிவரவில்லை.

அந்த வருடம் திருவையாறு தியாகராஜ ஆராதனைக்கு ஆலத்தூர் சுப்பிரமணிய அய்யருடன் போயிருந்தபோது, எம்.எஸ். அம்மா அங்கு நேஷனல் புரொக்ராமில் பாடப் போகிறார் என்று தெரிந்தது. ஆர்வம் காரணமாக, ஆல் இந்தியா ரேடியோ தயாரிப்பாளர் கே.சி. தியாகராஜனைப் பார்த்து, அதில் வாசிக்க வாய்ப்புக் கேட்டேன். எனக்கு அப்போது 18 - 19 வயதுதான். கே.சி.தியாகராஜன் என் மாமா. அவர் ஏற்கெனவே பக்கவாத்தியம் எல்லாம் ஏற்பாடு செய்தாகிவிட்டது என்று சொன்னதும், மனசுக்கு வருத்தமாகப் போய்விட்டது.

"வருத்தப்படாதே! என் கச்சேரிக்கு வாசி!" என்றார் ஆலத்தூர். அன்றைக்கெல்லாம் அப்படி வாசித்துவிட முடியாது. வயலின் ராஜமாணிக்கம் பிள்ளையிடமும் மிருதங்கம் பழனி சுப்பிரமணிய பிள்ளையிடமும் சம்மதம் பெற வேண்டும். அதையும் ஆலத்தூராரே வாங்கித் தந்தார். ஆனாலும் எம்.எஸ்.ஸுக்கு வாசிக்க முடியவில்லையே என்ற ஆதங்கம் இருந்தது.

1964ஆம் வருடம். செம்மங்குடி மியூசிக் அகடமியில் பாடியபோது அவருக்கு கடம் வாசித்தேன். நல்ல கூட்டம். பெரிய சதஸ். திருவாங்கூர் மகாராஜா, எம்.எஸ்.- சதாசிவம் என்று எல்லாரும் அமர்ந்திருந்தார்கள். என்னுடைய தனிஆவர்த்தனம் முடிந்ததும், நல்ல 'க்ளாப்ஸ்'. செம்மங்குடி "சபாஷ்!" என்று பாராட்டிவிட்டார். அந்தக் கச்சேரிதான் என் வாழ்க்கையில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது.

மறுநாள் செம்மங்குடியைப் பார்த்து ஆசி பெற, என் அப்பா ஹரிஹர சர்மா

# மெழுகுவத்தி கச்சேரி!

என்னை அழைத்துக்கொண்டு போனார்.

"நீ பெண்களுக்கு வாசிக்கறதுண்டோ?" என்று கேட்டார்.

"நான் வாசிக்கறேனே!" என்றேன். "எம்.எஸ்.ஸுக்கு வாசிக்கணும். அது பெரிய கௌரவம். அது மட்டுமல்ல. அப்போதுதான் 'பச்சை நோட்டு' (நூறு ரூபாய்) பார்க்க முடியும்!" என்றார்! அந்தக் காலத்தில் நூறு ரூபாய் கிடைப்பது அபூர்வம்.

"இன்றைக்கு கல்கி கார்டனில், இந்த வருஷம் 'சங்கீத கலாநிதி' விருது வாங்கிய ஆலத்தூர் சுப்பிரமணிய அய்யருக்கு ஒரு விருந்து உபசாரம் இருக்கிறது. அங்கே வந்துவிடு!"



'கடம்' விநாயகராம்



அதில் ஆறு மாசத்துக்கு எம்.எஸ். அம்மாவுடைய நிகழ்ச்சிகள் போட்டிருந்தது. வெளிநாட்டுக் கச்சேரிகள் உட்பட 100 - 150 கச்சேரிகள்! ஒரு கச்சேரிக்கே நான் கஷ்டப் பட்டுக் கொண்டிருந்த சமயத்தில், இப்படி ஒரு லிஸ்ட்டே கொடுத்ததும், என் கண்களில் நீர் வந்து விட்டது.

ஆரம்பம், ஸ்டாண்டர்ட் மோட்டார்ஸ் வீட்டுக்காரர்களின் கல்யாணக் கச்சேரி.

அடுத்தது, திருவேட்டீசுவரன் பேட்டையில், நான் குடியிருந்த வட்டாரத்திலேயே முதல் சபா கச்சேரி. அதிலிருந்து ஆரம்பித்தது என் நல்ல காலம்.

அவர்களுடன் முதன் முதலில் அமெரிக்கா போனேன். அதுதான் என் முதல் விமானப் பயணம். இப்போதும் அவர்களுடைய ஆசியால்தான் பறந்து கொண்டே இருக்கிறேன்.

அமெரிக்கா போகிறபோது எனக்கு பான்ட், கோட், ஷூ, பாக்ஸ் எல்லாம்

என்றார்.

மாலையில் அங்கே போனால், எல்லா பெரிய இசைக்கலைஞர்களும் இருக்கிறார்கள்.

சதாசிவம் மாமா ரொம்ப நாள் பழகியவர் மாதிரி, "விநாயகராம், வா உட்கார்!" என்றார். பயந்துகொண்டே உட்கார்ந்தேன்.

''அம்மாவுக்கு நீ வாசிக்கணும்!'' என்றார். ஒரு லெட்டர் கொடுத்தார்.



பிறகு ஜான் மெக்லாக்லினின் 'சக்தி' குழுவில் நான் இணைந்துகொண்டபோது, அந்த 'விக்கு' என்ற பெயரே எனக்கு நிலைத்துவிட்டது. அவர்களின் ராசி மட்டுமல்ல. ஆசியும்கூட.

அவர்களே தயார் செய்து கொடுத்தார்கள். மூன்று மாத டூர். அக்டோபரில் கிளம்பி, டிசம்பரில்தான் வந்தோம். ஸ்விட்ஸர்லாந்து, பாரிஸ், யு.கே., அமெரிக்காவில் கோஸ்ட் - டு - கோஸ்ட். பெரும்பாலும், ஒருநாள்விட்டு ஒருநாள் கச்சேரி. ஓய்வே கிடையாது.

அங்கே பாடிய முதல் வாய்ப்பாட்டுக் கலைஞர் எம்.எஸ். அம்மாதான். ஆடியன்ஸ் எல்லாம் வெளிநாட்டுக்காரர்கள். சதாசிவம் மாமாவின் ஏற்பாடுகள் எல்லாம் பிரமாதமாக இருந்தன. கச்சேரிகள் எல்லாமே ஓகோ என்று அமைந்தன.

ஆனால் ஐ.நா. சபை அரங்கில், நிகழ்ச்சி ஆரம்பமாவதற்கு முன்னால் அம்மாவுக்குத் தொண்டை கட்டிக்கொண்டுவிட்டது. பேசவே முடியவில்லை. மிகப் பெரிய க்கச்சேரி. எப்படி இருந்திருக்கும் பாருங்கள். அவர் வேண்டிக் கொள்ளாத தெய்வம் இல்லை. சபை நிறைந்துவிட்டது. பயந்தோம்.

ஆனால், போய் உட்கார்ந்தாரோ இல்லையோ, குரல் முன் போல, சரியாகிவிட்டது. கச்சேரி பிரமாதமாக அமைந்தது.

அம்மாவுடன் வெளியூர்கள் போகிறபோது, நாங்கள் ஒரு குடும்பம்போல இருந்தோம். அவ்வப்போது நாங்களே சமையல் செய்வோம். வீட்டில் இருப்பது போல் எல்லாரும் சகஜமாக இருப்போம். ராதாவின் பெண் லட்சுமி, என்னை 'விக்கு' என்று ஒருமுறை பெயரைச் சுருக்கி அழைத்தாள்.

ஒரு தடவை பம்பாய் சண்முகானந்தா ஹாலில் எம்.எஸ். கச்சேரி. ஹால் நிரம்பி வழிகிறது. படியெல்லாம் ரசிகர்கள் உட்கார்ந்திருந்தார்கள். ஆரம்பித்தவுடன், கரண்ட் கட் ஆகிவிட்டது. டஜன் கணக்கில் பெரிய பெரிய மெழுகு வத்திகளைக் கொண்டு வந்து ஏற்றி ஆங்காங்கே வைத்தார்கள்.

மூன்று மணி நேரக் கச்சேரியும் மைக் இல்லாமல் நடந்தது. ஆனால் 'பின் டிராப் சைலன்ஸ்' என்பார்களே, அப்படி அமைதியாக இருந்து ரசித்துக் கேட்டார்கள் மக்கள். அது என்னால் மறக்க முடியாத கச்சேரி.

தான் பெரிய பாடகி என்று நினைக்க மாட்டார். கர்வம் என்பது துளிகூடக் கிடையாது. கடைசிவரை சாதகம் பண்ணினார் என்றால் யாரும் நம்ப மாட்டார்கள். இனிமேல் 'இம்ப்ரூவ்' பண்ணணும் என்கிற அவசியமே கிடையாது. இருந்தாலும் விட மாட்டார். எம்.எஸ். அம்மா மாதிரி தாராள மனசு யாருக்கும் வராது. இந்தக் கை கொடுப்பது அந்தக் கைக்குத் தெரியாது.

நான் எம்.எஸ். அம்மாவுக்கு வாசிக்க வேண்டிய தேதியில் வேறு சீனியர் வித்துவான்களுக்கு வாசிக்க புக் ஆகியிருந்தால், அவர்களாகவே விட்டுக்கொடுத்து விடுவார்கள். அம்மாமீது எவ்வளவு மதிப்பு வைத்திருந்தால் அப்படிச் செய்வார்கள், என்று நான் நினைத்துப் பார்த்து வியந்திருக்கிறேன்.

தொகுப்பு : **சாருகேசி**

(அடுத்த வாரம் மணியம் செல்வன்)

# கண்ணே...

அமைதியாக, அதே சமயம் மிக வேகமாக நாம் இழந்து கொண்டுள்ள பல விஷயங்களில் மிக முக்கியமான ஒன்று கண் பார்வை! அதிலும் 'க்ளாக்கோமா' எனப்படும் கண் அழுத்த நோயால், பார்வை இழந்து வருபவர்களின் எண்ணிக்கை இந்தியாவில் வருடந்தோறும் அதிகரித்து வருகிறது.

"கண் அழுத்த நோயால் ஏற்படும் கண் பார்வை இழப்பை ஆரம்ப நிலையிலேயே கண்டறிந்து விட்டால் இந்த நோயை தடுத்து விடலாம்" என்கிறார் சென்னை, சைதாப்பேட்டை, பிரேம்ஸ் கண் மருத்துவமனையின் மருத்துவர் பிரேமா.



• டாக்டர் பிரேமா

"கண் அழுத்த நோய் என்பது பார்வை நரம்பை பாதிக்கும் நோய். நாம் பார்க்கும் உருவத்தின் பிம்பம், பார்வை நரம்பு வழியாக, விழித்திரையிலிருந்து மூளைக்குக் கொண்டு செல்லப்படுகிறது. கண் அழுத்த நோயால், பார்வை நரம்பு சேதமடைந்து பக்கப் பார்வையில் பாதிப்பு ஏற்படுகிறது. நம் பார்வையில் ஏற்படும் இந்தக் குறைபாட்டை, நம் பார்வை நரம்பு கணிசமாகச் சேதமடையும் வரை, நம்மால் கவனிக்க இயலாது. ஆரம்ப நிலையிலேயே சிகிச்சை எடுத்துக் கொண்டால் பாதிப்பைத் தவிர்க்கலாம்.



• கோனியோஸ்கோபி

பரம்பரை காரணமாகவும், நீரிழிவு நோய், அதிக இரத்த அழுத்தம், கிட்டப் பார்வைக் குறைபாடு உள்ளவர்களுக்கு, மற்றவர்களைவிட - கண் அழுத்த நோய் வரும் வாய்ப்பு அதிகம் உண்டாகின்றன.

ஆகுயஸ் ஹியூமர் (Aqueous Humor) எனப்படும் தெளிந்த திரவம் நம் கண்ணில் தொடர்ந்து உற்பத்தியாகிக் கொண்டேயிருக்கிறது. இந்தத் திரவம் வெளியேறும் பாதையில் அடைப்பு ஏற்பட்டால், கண்ணில் உள்ள திரவத்தின் அழுத்தம் அதிகமாகி, பார்வை நரம்புக்கு சேதம் விளைவிக்கிறது.

## சிகிச்சை முறைகள்

**ஆப்தல்மோஸ்கோப்** : பொதுவான கண் பரிசோதனையின்போதே, கண் அழுத்த நோய் உள்ளதா என உறுதிப்படுத்திவிட முடியும். 'ஆப்தல்மோஸ்கோப்' எனப்படும் கருவியின் உதவியால், பார்வை நரம்பில் பாதிப்பு உள்ளதா என்று கண்டறியலாம்.

**அப்ளனேஷன் டோனோமீட்டர்** (Applanation Tonometer) : 'கண் அழுத்த அளவி' எனப்படும் இக்கருவி, கண்ணின் அழுத்தத்தை மிகத் துல்லியமாகக் கணிக்க உதவுகிறது.

• அப்ளனேஷன் டோனோமீட்டர்







**டோனோ பென் (Tono-pen) :** அப்ளனேஷன் டோனோமீட்டரால் பதிவு செய்ய இயலாத கண் அழுத்தத்தை டோனோ பென் எனப்படும் டிஜிட்டல் டோனோ மீட்டர் கருவியால் பதிவு செய்ய லாம். படுத்தபடுக்கையாக உள்ளவர்களுக் கும் மருத்துவமனைக்கு வர இயலாதவர் களுக்கும் இந்தக் கருவி மூலம் கண் அழுத்த நோயைக் கண்டறியலாம்.

**பல்ஸ் ஏர் (Pulsair) :** கருவிழியையோ, கண் பகுதியையோ தொடாமலேயே காற்றழுத்தத்தின் மூலம் அழுத்தத்தைப் பதிவு செய்யலாம். நோயாளியை எந்த நிலையிலும் வைத்துப் பரிசோதிக்கலாம் என்பது இம்முறையின் சிறப்பு.

**கம்ப்யூட்டரைஸ்ட் ஃபீல்டு அனாலிஸிஸ் :** பார்வைப் பரப்பில் உள்ள ஒவ்வொரு புள்ளியையும் துல்லியமாக ஆராய்ந்து, பக்கப் பார்வையில் உள்ள

# நலமா?

கோளாறுகளைக் கண்டறிய, கண்ணின் பக்கப் பார்வையை ஆராய, தானியங்கி பெரிமீட்டர் உதவுகிறது.



• டோனோ பென்

**கோனியோஸ்கோபி :** கருவிழியின் மேற் புறத்தில் 'கோனியோஸ்கோப்' என்னும் லென்ஸை வைத்து, கண்ணில் உற்பத்தி யாகும் திரவத்தை வெளியேற்றும் பாதையை ஆராய்ந்து அறிவது கோனியோஸ்கோபி முறையாகும். ஓபன் மற்றும் குளோஸ்டு ஆங்கிள் க்ளாக்கோமாவை கண்டறிய, இது சிறந்த முறை.

**ஜி.டி.எக்ஸ். வி.சி.சி. :** இந்தக் கருவி, கண் அழுத்த நோயை மிகவும் ஆரம்ப நிலையி லேயே, கண்டறிய உதவுகிறது. அதாவது தானியங்கி மூலம் கண்டறியப் படும் பாதிப்பை, ஆறு வருடங்களுக்கு முன்னரே கண்டறிய உதவுகிறது. விழித்திரையில் உள்ள காங்கிலியின் திசுக்களை (Retinal Nerve Fibre Layer - RNFL) நேரடியாக ஆராய்ந்து அதில் உள்ள பாதிப்பை நமக்கு ஸ்கேனிங் லேசர் போலாரிமெட்ரி என்னும் முறையில், ஜி.டி.எக்ஸ் கருவி முடிவைத் தரு கிறது. புற நோயாளிக் கூடத்திலேயே இப்பரி சோதனையைச் செய்யலாம். இதற்கு கண் பாப்பா விரிவு தேவை யில்லை. ஐந்து



• ஆட்டோமேடட் பெரிமீட்டர்

நிமிடத்துக்கும் குறைவான நேரத்திலேயே முழு ரிஸல்ட்டையும் தந்து விடுகிறது. இந்தச் சிகிச்சையை முதல் முறையாக சென்னையில் பிரேம்ஸ் கண் மருத்துவனை அறிமுகப்படுத்தியது.

இது தவிர, கண் அழுத்த நோய் சிகிச்சைக்கு, ஆர்கன் மற்றும் என்.டி. யாக் லேசர் கதிர்கள் உபயோகப்படுத்தப் படுகின்றன. ட்ரெபிகுலெக்டெமி என்னும் மாற்றுப் பாதை அமைத்தல் அறுவை சிகிச்சை முறையும் மிக்க பயனுள்ளது.

மருத்துவத் தொழில்நுட்ப வளர்ச்சியால், 'க்ளாக்கோமா'வுக்கு நூதனமான பல சிகிச்சை முறைகள் உள்ளன. கண் கெட்ட பின்னே, தவிக்காமல் வாழ்நாள் முழுவதும் தவறாது கண் பரிசோதனை செய்து கொள்வதே சிறந்தது."

**- மினி**

# சுடோகு!






சுடோகு - இன்று உலகமெங்கும் ஒரு கலக்கு கலக்கிக் கொண்டிருக்கிற எண் புதிர். எண்களைக் கொண்டு சரியான முறையில் கட்டங்களை நிரப்ப வேண்டும் என்பதால், மொழிகளுக்கு அப்பாற்பட்டு வெற்றி கண்டிருக்கிறது.

சரி! என்ன செய்ய வேண்டும்?

இங்கே மேலிருந்து கீழாகவும் இடமிருந்து வலமாகவும் தலா ஒன்பது கட்டங்கள் - அதாவது மொத்தம் 81 கட்டங்கள் உள்ளன. இவை 3 x 3 ஆக ஒன்பது பெட்டிகளாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. 1 முதல் 9 வரையிலான எண்களை இந்தக் கட்டங்களில் நிரப்ப வேண்டும்.

மேலிருந்து கீழ், இடமிருந்து வலம், 3 x 3 என்று எந்த ஒன்பது கட்டங்களிலும், 1 முதல் 9 வரையிலான எண்களை ஒரே ஒரு முறைதான் பயன்படுத்த வேண்டும். நோ ரிபீட்டு!

விடை 31-ம் பக்கம்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | 7 | 8 | | | 6 | 9 | |
| 4 | 6 | | | 1 | | 8 | 2 | |
| 2 | 5 | | 9 | | | | | 1 |
| | | | 7 | | 6 | 1 | | 8 |
| | 7 | | | 8 | | | 5 | |
| 9 | | 3 | 4 | | 1 | | | |
| 1 | | | | | 8 | | 6 | 4 |
| | 2 | 4 | | 3 | | | 1 | 7 |
| | 3 | 6 | | | 5 | 9 | | |

பாரதிபாலன்



தனிமை! அடர்த்தியான தனிமை! யாருமற்ற தனிமையில் நான் நீந்திக் கொண்டிருக்கிறேன். என் கையும் காலும் வெட்டுப்பட்டு விலகினாற் போல் ஓர் உணர்வு. உடல் எதிலோ அமுங்கி மூழ்கிவிட்டது போல் ஒரு இணறல். மனம் இறக்கையாக அலைந்து கொண்டிருக்கிறது.

"கொஞ்சம் குளுகோஸ் தண்ணி தரட்டுமாங்க?"

"........"

"முழிச்சுப் பாருங்களேன். நா வறட்சிக்கு நல்லது." தலை அசைகிறது.

"இப்படி கொலைப் பட்டினியாகக் கிடந்தா...? ஆரஞ்சு இருக்கு. அதை யாவது பிழிஞ்சு தர்றேன்."

"........."

"ஒரே ஒரு மடக்கு. நாவுல ஈரம் படட்டும்."

கண்கள் தாழ்ந்து, நடுங்குகிறது.

"ப்ச! பாதி உங்களுக்கு மனசுதேன். எதுக்குத்தான் இப்படிப் பண்றீங்களோ?"

கடைக்கண் இறக்கத்தில் திரண்ட முத்து, தலையணையில் விழ்ந்து தலையணைக்குள் ஈரம் அமுங்கியது. அதைப் பார்த்ததும் அவள் முகம் சிறுத்துவிட்டது!

"இப்ப என்ன சொல்லிட்டேன்னு இப்படி...?"

அவளுக்கு என் மீது சலிப்பு! வேறு என்ன காரணம்? எனக்கு வயதாகிவிட்டது. ரிடையர் ஆகிவிட்டேன். கிழடு தட்டிய உருவம் சலிப்பைத் தராதா? பிள்ளைகள் காரியம் எல்லாம் ஆகிவிட்டது. அலைந்து திரிந்து, ஆவியாய்க் கசக்கி, காலத்தோடு எல்லாம் கரை சேர்த்து விட்டாகிவிட்டது. பெரியவன் மகேசன் இஞ்சினியர், ஒரு கடல் தேசத்தில் இருக்கிறான். சின்னவன் யு.எஸ். இவன் கொடிதான் இப்ப உயரப் பறக்கிறது. பெண் ஆஸ்திரேலியாவில் இருக்கிறாள். கல்யாணம் ஆகி ஒரு வருஷம் நாலு மாதம். மாப்பிள்ளை அங்கு டாக்டர். இவள் ஏதோ படிப்பில் சேர்ந்திருக்கிறாளாம். ரிடையர் ஆவதற்கு முன்பே, எல்லார் கழுத்திலும் முடிச்சு விழ வேண்டும் என்று மூச்சைப் பிடித்துக்கொண்டு ஓடியது; ஓய்வு இல்லை, ஒழிசல் இல்லை. எல்லாம் முடிந்த பின்பு 'அக்கடா என்று இருக்கலாம்; ஹிண்டு பேப்பர் படித்துக் கொண்டும் பீச்சில் நடந்து கொண்டும் இருக்கலாம் என்று நினைத்தது நடக்கவில்லை. இப்போது நடமாட்டமில்லாமல் கிடக்கிறேன்.

# அதிலிருந்து இதுவரை...

அவளுக்கு என் முகமும் எனக்கு அவள் முகமும் தான்! டீ.வியும் சலித்துவிட்டது எனக்கு. அவளுக்கு அதில் இன்னும் பசை இருக்கிறது. அழுகை நாடகங்களைப் பார்ப்பதில் ஓர் ஆனந்தம். தனக்கு அப்படி நேரவில்லை, எவளுக்கோ எங்கோ நடக்கிறது. தாராளமாகப் பரிதாபப்படுவாள். கவலைப்படமாட்டாள். முன்பு போல் வெளியில் உலாவுகிற பிரியமும் அறுந்து போய்விட்டது. எப்பவாவது பீச்சுக்குப் போவோம். பல இடங்களைப் பட்டியலிட்டு, கடைசியில் 'பீச்சை' டிக் பண்ணுவாள். அடையாறுக்கு அதுதான் பக்கம். ஆட்டோக்காரனும் கூடுதலாகக் கேட்டு வம்பு பண்ண மாட்டான். இப்போது இதுதான் ஃபார்முலா, தூரம் என்றால் பஸ், பக்கம் என்றால் ஆட்டோ. ஸ்கூட்டரைத் தொடவிடுவதில்லை. 'ஓவர் டிராஃபிக்' என்பாள். உண்மை அதுவல்ல; உயிர் பயம்! அலுவல் ரீதியான ஓய்வை, என் முழு ஓய்

வாகவே கருதிவிட்டான். அவள் மனம் அதை அப்படியேதான் படித்துப் பதிந்து கொண்டது.

என் கை நடுங்குகிறதாம். சட்டென்று எல்லாம் மறந்துவிடுகிறேனாம். பார்வை கூட முன்பு மாதிரி இல்லையாம். ஸ்கூட்டர் ஓட்டும்போது பேலன்ஸ் தவறுகிறதாம். 'இளநீர் வாங்கப் போனால் கூட அவன்கிட்டயே சீவி வாங்கிட்டு வந்திடுங்க' என்கிறாள். அருவாளை கையில் போட்டுப்பேனாம். 'கேஸ் சிலிண்டரை இப்படிக் கொஞ்சம் நகத்தி வெச்சுருங்க' என்பாள். சிலிண்டர் தீர்ந்து விட்டால் ஒரு உருட்டு உருட்டச் சொல்வாள். (ஒரு காபி தண்ணி வெக்க காஸ் கிடைக்கும்) இது எல்லாம் இப்போது இல்லை! பெரிய வாட்டர் கேன் தூக்கிக்கொண்டு வருபவன் வாசலிலேயே வைத்துவிட்டுப் போய் விடுவான். நாங்கள் தான் ஆளுக்கு ஒரு கை போட்டு கிச்சனில் வைப்போம். இப்போது தண்ணீர் சுமந்து வருபவன் கிச்சன் வரை வருகிறான். இதெல்லாம் அன்பினால் மட்டுமல்ல; பயம், தானும் பயந்து மற்றவர்களையும் பயமுறுத்துவது. நியாயமான சந்தேகங்களும் தயக்கங்களும் என் உறுதியைக் குலைத்துக் கொண்டிருந்தன.

''என் மனைவிக்கு புடைவை எடுத்துக் குடுத்து நான் தெருவுக்கே வந்துட்டேன்!''

''அத்தனை புடைவையா எடுத்துக் குடுத்தே?''

''இல்லை... ஒரே புடைவைதான்! 1276 அடி புடைவை!''

- சம்பத் குமாரி



டியூட்டி டாக்டர் அறைக்குள் வருகிறார். ஒருவித மான செயற்கை அமைதி. கூடவே வம்பாகச் சிரிக்கும் நர்ஸுகள். புன்னகை மாறாமல் இருக்கிறார்கள். கேரள மண்ணின் கொடை. என் வீட்டுக்கார அம்மாள் எழுந்து கொள்கிறாள்.

"எப்படி இருக்கார்?"

"காலையிலெருந்து வெளிக்குப் போகலை..."

"ஆகாரமே இல்லையேம்மா..."

"ரிப்போர்ட் டாக்டர்?"

"சுகர் பார்டர்லெ இருக்கு. இன்னொரு டெஸ்ட் எடுக்கணும். குளுகோஸ் டாலரன்ஸ் டெஸ்ட். அது நாளைக்கே பண்ணிடலாம். அப்பத்தான் கன்ஃபர்ம் பண்ண முடியும். பிளட் ப்ரஷர் கொஞ்சம் வேரியாகுது. ஈ.ஜி.ஜி.ரிப்போர்ட் க்ளியரா இல்லை..."

"எதுனால மயக்கம் வந்துச்சு?"

''பாக்கலாம். டேப்லெட்ஸ் கன்டினியு பண்ணுங்க...''

"வேறு ஒண்ணுமில்லையே டாக்டர்?"

"பார்க்கலாம்."

அடப்பாவி! ஒண்ணுமில்லைன்னு சொல்றானா பாரு! எனக்கு எல்லாம் நார்மல், நீங்கதான் நார்மல் இல்லை. நடந்து வந்த என்னை ஸ்ட்ரெச்சர்ல போட்டு உருட்டிட்டு வந்துட்டீங்களாடா. தேர்ந்த நாடகம். என்ன பதற்றம்; என்ன பாவனை; படார் என்று படுக்க வெச்சுட்டீங்களடா; ஒண்ணும் சொல்ல முடியலெ போ. வாச் ரிப்பேர், வாஷிங் மிஷின் ரிப்பேர், டி.வி. ரிப்பேர் எல்லாப் பாவிகளும் ஒரே மாதிரி இருக்கேங்களடா!

''இதுக்கு முன்னாடி எப்பவாவது மயங்கி இருக்காரா?''

"ம்ஹும்!"

"ஓ.கே."

"இந்த ஒரு வாரமாத்தான் தலை சுத்துறாப்புல இருக்கு. கிறுகிறுன்னு வருதுன்னார். திடீர்னு சட்டுனு எதையாவது பிடிச்சுப்பார். என்னான்னு கேட்டா அப்படியே தள்றாப்புல இருக்கும்பார்..."

வழக்கம் போல் கால் பக்கத்துக்கு மாத்திரைகள் எழுதினான். இங்கும் அங்கும் தட்டிப் பார்த்துவிட்டு, கண், உதடு எல்லாம் பிதுக்கிப் பார்த்துவிட்டு நடந்துவிட்டான்.

"சாப்பிடுறீங்களா?"

"ம்ம்... ஹிம்..."

"சூடா பால் தரட்டுமா?"

தலைதான் உருள்கிறது.

"தூக்கமா?"

"........."

'ஏன் ஒரு வடியா இருக்கீங்க?'

என் உடம்பெல்லாம் திருகியது.

அவள் குரல் நடுங்கி நழுவிற்று. அது தணிவதற்குள் வேறு ஒரு குரல். கொடூரமான குரல். அந்தப் பயத்தில் கண்களை இறுக்கிக் கொண்டேன். என் கண்ணெதிரே அந்த ஆபத்து நீண்டு கொண்டிருந்தது. ஒரு கொடூரமான உருவம் தலைதூக்கி என்னைப் பார்த்தது. எருமை போலவும் யானை போலவும் அது உருவம் கொண்டிருந்தது. கல் வாழை இலை போல திருகிய காதுகள். உடல் சூடு தணிந்து குளிர் அதிகரிப்பது போல பிரமை. மிக வலுவான அந்தப் பார்வை என்னைக் குதறியது. அந்த உருவம் அப்படியே என் நெஞ்சுக்கு நேராக செங்குத்தாக இறங்குகிறது. என் உடல் வியர்த்து விட்டது. உரக்க 'நீ யாரு?' என்று குரல் கொடுக்க முயல்கிறேன். நா எழவில்லை. கண்களையும் திறக்க முடியவில்லை. திரும்ப அலற, தைரியம் வரவில்லை. குரல் வளையைக் கொத்தாய் அழுத்திப் பிடித்துகொண்டாற்போல் இருந்தது.

"என்னங்க... என்னங்க...?"

பதறுகிறாள்.

"என்ன செய்யுது...?"

என் விழி உயர்ந்து விட்டது.

"ஐயோ!... ஐயோ!"

கதவு திறந்து ஓடுகிறாள். டாக்டர் நர்ஸுகள் சூழ வருகிறார். இதற்குத்தான் காத்திருந்தது போல அவசர சிகிச்சைப் பிரிவுக்குள் என்னைத் தள்ளிவிட்டார்கள்.

மூன்றாவது நாள் –

எனக்கு விழிப்பு வந்தது. விழிப்பு என்றால் கண்விழித்தது. முழுவதுமாக இல்லை. என் நினைவு திரும்பி விட்டது. அந்த நிச்சயத்தை மட்டும் உணர முடிந்தது. அவள் தன் கைகளை நெற்றியில் வைக்கிறாள். என் கைகளைப் பற்றி வாஞ்சையுடன் தடவுகிறாள். அவளிடம் பேச வேண்டும் என்று மனம் திரள்கிறது. குரல் சேராமல் அப்படியே குலைந்து விடுகிறது. எனக்கென்னவோ அவளிடம் பேச வேண்டும் என்று ஆவல். அது வலுத்துக் கொண்டே போகிறது.

இதுவரை அவளிடம் பேசியிருக்கிறேனா? இப்போது நினைப்பது போல பேச முடிந்திருக்கிறதா? மனம் தோய்ந்து உரையாடியிருக்கிறேனா? குடும்பம், பிள்ளைகள், வேலை, கல்யாணம், காசு, வீடு என்று எதையும் முன் வைக்காது அவளிடம் பேசியிருக்கிறேனா? மனம் கனக்கிறது! வெறுமனே சிரித்துக் கொண்டோ... சிந்தித்துக் கொண்டோ... இல்லை. அப்படி ஒன்றும் அவளிடம் பேசிவிடவில்லை. எங்கள் உறவும் உரையாடலும் குடும்ப விஷயங்களுக்குள்ளே குவிந்து விட்டது. எங்கள் எல்லைகளை அகட்டிக் கொள்ளவில்லை; அவளுக்கும் சொல்ல எவ்வளவோ இருந்திருக்கும். அந்த ஈரம் கசிந்து, கசிந்து காய்ந்திருக்க வேண்டும். மீள முடியாத தினசரிப் பொழுதுகளில் புதைந்து விட்டோம். அவளிடமிருந்து நான் எதையும் கண்டெடுக்கவில்லை. அவளுக்கும் அப்படித்தான் இருக்கும்.

"கண்ணைத் தொறங்க..."

"........"

"ஒண்ணுமில்லை. தொறந்து பாருங்க..."

திறக்க முயன்றேன். என் எதிரே அவள். சிதிலமான கல்சிற்பம் போல் அந்த உருவம் என் கண்களில் ஆடிற்று.

"எதுனா தரட்டுமா?"

இன்னும் குரலை உயர்த்திக் கேட்கிறாள். தெளிவாகவே கேட்கிறது.

"ஜூஸ் தரட்டுமா?"

"ஒரு ஸ்பூன் தர்றேன். தெம்பா இருக்கும்."

என் உடல் நடுக்கம் குறையவில்லை. தொண்டைக் குழிக்குள்ளிருந்து நழுவிய குரலைக் கூட்டிக் குவித்தேன்.

"நீ சாப்பிட்டியா?"

அவளிடம் நான் பேசும் முதல் ஆத்மார்த்தமான வார்த்தை இதுதான் என்று உணர்கிறேன். அவள் முகம் கலவரமடைகிறது.

"ஒரு ஸ்பூன் ஊத்தட்டுமா? தெம்பா இருக்கும்."

மேற்கொண்டு பேச முடியவில்லை. என் கண்களில் இருந்து நீர் இறங்கி தலையணையில் விழுந்து நசுங்குகிறது. ○

## சுடோகு
## புதிர் விடை

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 3 | 1 | 7 | 8 | 2 | 4 | 6 | 9 | 5 |
| 4 | 6 | 9 | 5 | 1 | 7 | 8 | 2 | 3 |
| 2 | 5 | 8 | 9 | 6 | 3 | 7 | 4 | 1 |
| 5 | 4 | 2 | 7 | 9 | 6 | 1 | 3 | 8 |
| 6 | 7 | 1 | 3 | 8 | 2 | 4 | 5 | 9 |
| 9 | 8 | 3 | 4 | 5 | 1 | 2 | 7 | 6 |
| 1 | 9 | 5 | 2 | 7 | 8 | 3 | 6 | 4 |
| 8 | 2 | 4 | 6 | 3 | 9 | 5 | 1 | 7 |
| 7 | 3 | 6 | 1 | 4 | 5 | 9 | 8 | 2 |

# "சானியாவைத் தோற்கடிச்சேன்!"

"இந்தியாவிலேயே தமிழ்நாட்டிலிருந்துதான் அமிர்தராஜ் சகோதரர்கள், ராமநாதன் கிருஷ்ணன், ரமேஷ் கிருஷ்ணன்னு பெரிய பெரிய ப்ளேயர்ஸ் எல்லாம் உருவாகி சர்வதேச அளவுல நாட்டுக்குப் பெருமை தேடிக் கொடுத்திருக்காங்க. ஆனா இப்போ... தமிழ்நாட்டிலிருந்து அந்தளவுக்கு நட்சத்திரங்கள் உருவாகாததற்குக் காரணம் வசதி இல்லாததுதான்" என்கிறார் சாய் ஜெயலட்சுமி. இவரது ஆதங்கத்தைப் போக்கியுள்ள தமிழக அரசு நான்கு லட்சம் ரூபாயை உதவியாக அளித்துள்ளது.

"டென்னிஸ் ரொம்ப காஸ்ட்லியான விளையாட்டு. ஒரு ராக்கெட் மட்டை வாங்கணும்னா கூட குறைஞ்சது மூவாயிரம் ரூபாய் தேவைப்படும். ஒரு டோர்னமெண்ட் விளையாடப் போனா ராக்கெட் செலவே பத்தாயிரம் ரூபாய்க்கு எகிறிடும். பணம் இல்லாததால திறமையிருந்தும் சர்வதேச போட்டிகள்ல விளையாட முடியாத நிலையிலிருந்தேன். எத்தனை நாளைக்குத்தான் பெற்றோரை நம்பியே வாழ முடியும்?"

'நான் உனக்கு செலவு பண்றேன். நீ விளையாட்டுல மட்டும் கவனம் செலுத்து'ன்னு வானத்திலிருந்து குதிச்சு யாராவது உதவி பண்ண மாட்டாங்களான்னு ஏங்கிட்டிருந்தேன். முதலமைச்சருக்கு நன்றி" என்கிற சாய் ஜெயலட்சுமி, தமிழ்நாட்டின் முன்னணி டென்னிஸ் வீராங்கனை. சர்வதேச அளவில் நான்கு போட்டிகளில் சிங்கிள்ஸில் வென்றதோடு டபுள்ஸில் 27 பட்டங்கள் வென்றுள்ளார்.

**சா**னியா என்றதும் முகம் பிரகாசமாகிறது.

"பொதுவா தென்னிந்தியர்கள் எல்லாரும் சாஃப்ட்டாதான் விளையாடுவோம். ஆனா சானியாவோட கேம் தனி. அவருக்கு 14 வயசிருக்கும்போது நான் இரண்டுமுறை தோற்கடிச்சிருக்கேன். அதுக்கப்புறம் சானியா கைவரிசை காட்ட ஆரம்பிச்சுட்டாங்க. 'யாராயிருந்தாலும் என்னால தோற்கடிக்க முடியும்'ங்கிற வில்பவர் சானியாகிட்ட எக்கச்சக்கமா இருக்கு" என்று புகழாரம் சூட்டுகிறார்.

"28 வயசுலயும் நான் டென்னிஸ் ஆடறது பலருக்கும் ஆச்சர்யம். என்னை ஊக்கப்படுத்தாம இன்னுமா ஆடறேன்னு கேட்பாங்க. கல்யாணம் பண்ணிய பிறகும் அஞ்சு ஜார்ஜ் சாதிக்கறதில்லையா?" என்று கேள்வியெழுப்பும் சாய்க்கு இன்னும் அந்த மங்கலத் திருநாள் நிகழவில்லை.

"இதை சாதிச்ச பிறகுதான் கழுத்தை நீட்டணும்கிற குறிக்கோள் எல்லாம் இல்லை. என் தொழிலைப் புரிஞ்சுக்கிற ஆள் கிடைச்சா நாளைக்கே கெட்டிமேளம்தான்" எனும் சாய் ஜெயலட்சுமி ஐ.ஓ.சியில் பணிபுரிகிறார்.

- சநகன்



சேனல்

# "எனக்கு தைரியமில்லை!"

ஓப்பன்

-தேவயானி பேட்டி

விரைவில் அம்மா ஆகப் போகிறார் தேவயானி. (அரசியல் அம்மா இல்லீங்க. 'ங்கா, ங்கா' அம்மா) கிளிசரின் கலையரசியிடம் ஒரு ஹனி பேட்டி.

**சின்னத்திரைக்கு உங்களைப் போன்றவர்கள் வந்துவிட்டதால் ஹீரோயினிஸம் அதிகமாகக் கதைகளில் திணிக்கப்படுகிறதாமே...?**

டீ.வி.ங்கறது குடும்பப் பெண்களுக்காக உள்ளது. அதுல போய் அடிதடி, வன்முறைன்னு பண்ண முடியாது. பெண்களைச் சுத்திப் பின்னப்படுறதால அதை ஹீரோயினிசம்னு சொல்விடறதா? நான் சினிமால ஹீரோயினா நடிச்சதால இங்கேயும் கதாநாயகியா நடிக்க வாய்ப்பு தர்றாங்க. எங்களுக்காக ஹீரோயினிசத்தை திணிக்கறாங்கன்னு சொல்ல முடியாது.

**சின்னத் திரைக்கும் சினிமா என்கிற கவர்ச்சி தேவையா?**

டீ.வி.யில் கதைதான் ஹீரோ - ஹீரோயின். கதைங்கறது ஐஸ்க்ரீம் மாதிரி... 'சினிமா ஹீரோயின்'ங்கறது ஐஸ்க்ரீம் மேல தூவுற பாதாம், பிஸ்தா, மாதிரி... ஐஸ்க்ரீமை சும்மாவும் சாப்பிடலாம்... பாதாம், பிஸ்தா தூவியும் சாப்பிடலாம்.

ஒரேயொரு மெகா சீரியல்ல நடிக்கறதால சினிமாவில் செய்யற மாதிரி வெரைட்டியான கேரக்டரைச் செய்ய முடியவில்லை என்ற வருத்தம்

இருக்கிறதா?

ஒரு சமயத்துல ஒரு சீரியல் பண்றதுதான் அழகு. வாய்ப்பு வருதேன்னு எல்லாத்தையும் செய்தா சிரமமாயிடும். ஒரே சீரியல்ல திருமணமாகாத பெண், வேலைக்குப் போகும் பெண், பொறுப்பான குடும்பத்தலைவி, புரட்சிப் பெண் இப்படி வெவ்வேறு உணர்வுகளை பல சமயங்கள்ல வெளிப்படுத்த மெகா சீரியல்ல ஸ்கோப் இருக்கு. இன்னும் சொல்லணும்னா ஒரு மெகா சீரியல் ஐம்பது படத்துக்குச் சமம். அவ்ளோ எக்ஸ்போஷர் கிடைக்குது.

**'கோலங்கள்' உங்களுக்காக வேகப்படுத்தப்படுகிறதாமே?**

நான் இப்போ கர்ப்பமா இருக்கேன்... பிரசவ கால விடுப்புங்கிறது எல்லாருக்குமே அவசியம் தானே? அதுக்காக சில மாதங்கள் ஒதுக்க வேண்டியிருக்கும். அப்போ கதையை பேலன்ஸ் பண்றதுக்காக சில எக்ஸ்ட்ரா சீன்களை வேணும்னா எடுத்துப்பாங்க. மற்றபடி, எனக்காக கதையை ஸ்பீடா கொண்டு போறாங்கன்னு சொல்ல முடியாது.

**குடும்பப் பிரச்னை குறித்து மீடியாவில் வந்த செய்திகள் பற்றி?**

சார்... அது ஒண்ணுமில்லாத விஷயம். சின்ன விஷயத்தை பூதாகரமா எழுதிட்டாங்க. உண்மையைச் சொல்லணும்னா, என் மனசுல அந்தப் பிரச்னை சின்ன பாதிப்பைக்கூட ஏற்படுத்தல.

**'காதலுடன்...' படத்துக்குப் பிறகு ஏன் படம் தயாரிக்கவில்லை?**

அந்த ஐடியாவே கிடையாது. அந்தப் படமே நாங்க எதிர்பார்த்த மாதிரி போகல... அதனால இன்னொரு படம் எடுக்கற அளவுக்கு என்கிட்ட மன தைரியம் இல்ல.

**உங்கள் கணவரை ஏன் சீரியல் பக்கம் கொண்டு வரக்கூடாது?**

அய்யய்யோ... சான்ஸே இல்ல... இன்னும் அவர் சினிமாவுல சாதிக்க வேண்டியது நிறைய இருக்கு. அதனால சீரியல் பக்கம் வர்ர யோசனை எங்க இரண்டு பேருக்குமே இல்ல.

- முத்து

## புள்ளி விவரப் புலி!



சுனாமி குழந்தைகளிடம் ஏற்படுத்தியுள்ள பாதிப்புகளைப் பற்றிய முதல் முக்கியப் புள்ளி விவரம் வெளிவந்துள்ளது. 16,818 கேரள குழந்தைகள் இதில் பங்கேற்றனர். இவர்களுள் 1093 குழந்தைகள் தொடர்ந்து பயத்தினால் அவதிப்படுகிறார்கள். 838 குழந்தைகள் தண்ணீரைக் கண்டால், பெரும் சப்தங்களைக் கேட்டால் செயலிழந்து விடுகிறார்கள். 536 பேருக்கு கடுமையான தலைவலி மற்றும் வயிற்று வலி. 460 குழந்தைகளால் இரவில் தூங்க முடிவதில்லை. 276 குழந்தைகள் இன்னமும் சுனாமி அதிர்ச்சியிலிருந்து மீளவில்லை. 16 குழந்தைகளால் பேசவே முடியவில்லை.

CKM
DIVINE HERBAL CENTRE

# புற்று நோய்க்கு தெய்வீக இயற்கை மூலிகை மருத்துவம்

நம் உடலில் உள்ள ஒவ்வொரு செல்களும் வளருகின்றன. ஒவ்வொரு நிமிடமும் பழைய செல்கள் அழிந்து புதிய செல்கள் உருவாகி கொண்டே இருக்கின்றன. இதற்கு இயற்கையாகவே ஒரு கட்டுப்பாடு உள்ளது. ஆனால் சில செல்கள் கட்டுப்பாடின்றி உடலில் எந்த இடத்திலும் பல்கிப் பெருக வளர ஆரம்பிக்கும். கட்டுப்பாடு இல்லாமல் வளர்ச்சியடையும் செல்கள் ஒரு கட்டியாக மாறுகிறது. இதைத்தான் புற்றுநோய் என்கிறோம். எல்லா ரக புற்று நோய்களுக்கும் சில வகை பழக்க வழக்கங்களே காரணமாக இருக்கின்றன. புகையிலை போடுவதால் வாயில் புற்று நோய், சிகரெட் பிடித்தல் காரணமாக நுரையீரல், தொண்டை, உணவுக் குழாய், மூத்திரப் பையில் புற்று நோய், பொடி போடுவதால், மூக்கில் புற்று நோய், மது அருந்துவதால்காமாலை வந்தால் கல்லீரல், இரைப்பையில் புற்று நோய் அதிக குழந்தைகளை பெறுதல், பல ஆண்களுடன் தொடர்பு கொள்ளுதல் ஆகியவற்றைகர்ப்பப்பை புற்று நோய், ஏற்படுகின்றது. மேலும் நாம் உண்ணும் உணவு வகைகள் தயாரிப்பில் நிலங்களில் அதிகமாக இரசாயன உரங்கள், மருந்துகள் சேர்ப்பதாலும், சுகாதாரமற்றசுற்றுபுறசூழ்நிலைகளாலும், அவ்வப்போது நாம் உபயோகிக்கும் இரசாயன மாத்திரைகளாலும் அதிகமான கோபம், பயம், மன உளைச்சல், பரபரப்பு அடிக்கடி உணர்ச்சி வசப்படுதல் போன்றவற்றின் காரணமாக தோன்றும் நரம்புத் தளர்ச்சியாலும் புற்று நோய் வரலாம். ஒரு புற்று நோய் செல் பல்கி பெருகி புற்று நோய் கட்டியாக மாறுவதற்கு குறைந்தது 7 முதல் 10 ஆண்டுகள் ஆகும்.

**புற்றுநோய் ஆரம்ப அறிகுறிகள் :** ஒவ்வொரு உறுப்புக்கும் எந்தவிதமான நோய் வந்தாலும் ஒரே விதமான அறிகுறிகள் தான் தென்படுகின்றன. உதாரணமாக காச நோய், நிமோனியாக் காய்ச்சல் ஆகியன நுரையீரலைத்தாக்கும்போது இருமல், சளி, மூச்சு வாங்குதல், சளியில் இரத்தம் ஆகிய அறிகுறிகள் தென்படுகின்றன. நுரையீரலைப் புற்றுநோய் தாக்கும் போதும், இதே அறிகுறிகள்தான் இருக்கும். இதேபோன்று வயிற்றுப் புண்ணுக்கு இருக்கும் அறிகுறிகள்தான் இரைப்பையில் புற்றுநோய் வந்தால் இருக்கும். எனவே எந்த நோயின் அறிகுறிகளும் இரண்டு வாரத்திற்கு மேல்இருந்தால் உடனடி மருத்துவ ஆலோசனை அவசியம். எச்சில் துப்பும்போது ரத்தம் வந்தால் அலட்சியப்படுத்தக் கூடாது. ஏனெனில் புற்று நோய்க்கென தனிப்பட்ட அறிகுறிகள் கிடையாது. பொதுவான அறிகுறிகளுடன் புற்று நோய் இருக்க வாய்ப்புகள் அதிகம்.

**புற்று நோய்களைத் (தவிர்க்கும்) தடுக்கும் உணவு வகைகள் :** புற்று நோயாளிகளுக்கு பச்சை காய்கறிகள் நல்லது. மஞ்சள் நிறத்திலும், பச்சை நிறத்திலும் உள்ள காய்கறிகள் மற்றும் பழங்கள் புற்று நோயைத் தடுக்க கூடியவை. இவற்றில் வைட்டமின் அ, இ சக்திகள் அதிகம். வைட்டமின் அ-வில் பீட்டாகரோட்டின் என்றபொருள் உள்ளது. இது ஒரு ஆண்டி ஆக்சிடெண்ட் புற்றுநோயை தடுக்கும் குணம் இதற்குண்டு. காரட், தக்காளி, மாம்பழம், பலாப்பழம், கொய்யா, ஆரஞ்சு, ஆப்பிள், திராட்சை, எலுமிச்சை, நெல்லிக்காய், முட்டைகோஸ், பீட்ரூட் போன்றவற்றில் மேற்சொன்ன சத்துக்கள் அதிகமுள்ளன. இவற்றைஅடிக்கடி உண்பவர்களுக்கு புற்றுநோய் வரவாய்ப்பில்லை. இதேபோல் நார்பொருள் நிறைந்த உணவுகளை சாப்பிட்டால் பெருங்குடல் தொடர்பான புற்றுநோய்கள் வருவது குறைகிறது. கோதுமை, கம்பு, சோளம், கேழ்வரகு, தேங்காய், நிலக்கடலை, அவரை, கத்திரிக்காய், வெள்ளரிக்காய், வெண்டைக்காய், பட்டாணி, வெங்காயம், பேரிச்சம்பழம், வாழைப்பழம் ஆகியவற்றில் நார்ச்சத்து அதிகம். மேலும் முருங்கை கீரை, பொன்னாங்கன்னி கீரை, மணத்தக்காளி கீரை, மஞ்சள், சீரகம், துளசி, கசகசா, வெள்ளைப்பூண்டு ஏலக்காய் ஆகியவற்றிலும் புற்று நோயைத் தடுக்கின்றநொதிப் பொருட்கள் அடங்கியுள்ளன. ஆகவே இவைகளை அடிக்கடி நமது உணவுகளில் தவறாமல் பயன்படுத்துவது நல்லது.

**குறிப்பு :** சென்னை, வேலூர், காஞ்சிபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர், ஒசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம் - விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**தகவல் :** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 28 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெறரூ.100/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.100/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டைப் பெற ரூ.100/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

| | |
|---|---|
| 2 | வேலூர் |
| 2 | காஞ்சிபுரம் |
| 4 | கடலூர் |
| 4 | விழுப்புரம் |
| 4 | திருவண்ணாமலை |
| 7,8 | மும்பை |
| 9 | பெங்களூர் |
| 12 | சேலம் |
| 12 | ஈரோடு |
| 12 | திருப்பூர் |
| 13 | கோவை |
| 13 | உடுமலைபேட்டை |
| 14 | மதுரை |
| 14 | திருநெல்வேலி |
| 15 | விருதுநகர் |
| 15 | தஞ்சாவூர் |
| 16 | திருச்சி |
| 16 | கரூர் |
| 20,21 | புதுடெல்லி |

டாக்டர் C.K.மாணிக்கவாசகம் அவர்களால் 34 வருட அனுபவ ஆராய்ச்சியில் எழுதப்பட்ட **"எளிய முறையில பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்"** என்ற நூலினை பதிவுத் தபாலில் பெற ரூ.120/-ம், **"என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்"** என்ற புதிய நூலினை பதிவுத் தபாலில் பெற ரூ.120/-ம் தலைமை முகவரிக்கு M.O அனுப்பவும். மேலும் விவரங்களுக்கு :

## CKM தெய்வீக மூலிகை மையம்
## CKM DIVINE HERBAL CENTRE

தலைமை முகவரி : அஞ்சல் பெட்டி 30, எண்.1, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்),
திருப்பத்தூர் (வ.ஆ.மா.) - 635 601 ✆ : 04179-220469, 222769 Cell : 9842369696

சென்னை முகவரி : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரிக்லி மேனர் பக்கத்தில்)
கெல்லீஸ், சென்னை - 10. ✆ : 044-26424285, 26427638 Cell : 9444001447
T-4, 3வது மாடி, பிளாட் 3, 5வது தெரு, ஸ்ரீ லட்சுமி ஹோம்ஸ், அண்ணா திருநகர்,
கோயம்பேடு, சென்னை - 107. ✆ : 044-55643347 Cell : 9282405758

டெல்லி கிளை : 6/34, W.E.A., Karolbagh, New Delhi - 5. ✆ : 011-25736220 Cell : 9868026743

மேலே உள்ள முகவரியில் ஆலோசனை தினமும் நேரம் காலை 10.00 - 1.00 மாலை 5.00 - 7.00



விஜயகாந்த் பேசுகிறேன்! 2

'இலங்கையிலிருந்து தாயகம் திரும்பிய கோபால மேனன், சில மாதங்களில் காலமானார். குடும்பத்தின் பெரிய ஆதரவு போனதும், வறுமை தலை விரித் தாடியது. குடும்ப நண்பர் வேலு நாயர் உதவியால், தனது பிள்ளைங்களோட கும்பகோணம் வந்து சேர்ந் தார் அன்னை சத்யா.

அண்ணன் தம்பி இருவரையும் ஸ்கூல்ல சேர்த் தாங்க. ஆனா தொடர்ந்து படிக்க முடியாத அளவுக்கு வறுமை வாட்டியது. என்ன பண்றதுனு தெரியாம குழம்பித் தவிச்சாங்க. ரெண்டு பிள்ளைங்களுக்கு வயிறாரச் சாப்பாடு கொடுக்க முடியாம அவதிப்பட்டாங்க. அதனால கிடைச்ச வேலை செய்ய சித்தமானாங்க. அது கூலி வேலையா யிருந்தாலும் சரி, ஆனா யார்கிட்டேயும் கையேந்தி நிற்கக் கூடா துங்கறதுல உறுதியாயிருந்தாங்க.

'கொடியது கொடியது இளமையில் வறுமை கொடியது'னு அவ் வைப் பாட்டி சொன்னாரே, அந்த வறுமையின் கொடுமையை சின்ன வயசுலேயே அனுபவிச்சவரு எம்.ஜி.ஆர். பசியும் பட்டினியுமா எத் தனை நாளைக்குத்தான் ஸ்கூலுக்குப் போக முடியும்...?

# நானே ராஜா, நானே மந்திரி!

அந்த மாதிரி சூழ்நிலையில்தான், நாடகங்களில் பின்பாட்டு பாடுற நாராயணன் நாயர் ஒரு யோசனை சொன்னார். 'தான் வேலை பார்க்கிற நாடக கம்பெனியிலேயே சக்ரபாணியையும் ராமச்சந்திர னையும் சேர்த்து நடிப்புப் பயிற்சி பெறச் செய்யலாம்'னு. அன்னையும் அதற்குச் சம்மதித்தார்.

தனது பிள்ளைங்க பெரிசா படிக்காவிட்டாலும் பரவாயில்லே. அவங்க வறுமைப் பிடியில வாடி வதங்கி போயிடக்கூடாதுனு நினைச்ச அன்னை சத்யா, மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனிங்கற நாடகக் குழுவுல பிள்ளைங்கள சேர்த்து விட்டார்.'

புரட்சித் தலைவரோட இந்த வாழ்க்கைக் குறிப்பைப் படித்தபோது ரொம்பவும் கலங்கிட்டேன். அந்தக் குறிப்பு என்னைப் பத்தியும் யோசிக்க வைத்தது.

வறுமை, என் தலைவர் எம்.ஜி.ஆரைப் படிக்கவிடவில்லை. ஆனா எனக்கு வசதியும் வாய்ப்பும் இருந்தும் நான் படிப்புல பெரிசா கவனம் செலுத்தல. விளையாட்டிலும் சேட்டையிலும் ஸ்கூலை 'கட்' அடிச்சு சினிமாவுக்குப் போறதுலேயும் இருந்துட்டேன். (அதனாலதான், என்

பிள்ளைங்களோட படிப்பு விஷயத்துல ரொம்பக் கண்டிப்பான தந்தையா இருக்கேன்) நான் ஸ்கூலுக்கு சரியா போகாம, எங்கப்பாகிட்டே வாங்கின அடி கொஞ்சம் நஞ்சமில்லே, செம கவனிப்புதான்.

எங்கம்மா இறந்ததும் சொந்தக்காரங்க எல்லாம் சேர்ந்து, குழந்தைங்க வளர்றதுக்கு தாயன்பு வேணும், அவங்களை பார்த்துக்கொள்ள ஒரு தாய் வேணும்னு சொல்லி, உடனடியாக எங்கப்பாவுக்குக் கல்யாணம் செஞ்சு வச்சாங்க. அவங்க தான் என் சின்னம்மா ருக்குமணியம்மாள்.

அவங்களுக்கு மொத்தம் ஏழு பேர் பிறந்தாங்க. அதுல நாலு ஆண்கள், மூணு பெண்கள், நாங்க 11 பேரும் ஒரே வீட்ல வளர்ந்தோம். எல்லாரும் ஒண்ணா கூட்டுக் குடும்பமாக வாழ்ந்து வந்தோம். எல்லா பிள்ளைங்ககிட்டேயும் அப்பா, அன்பா இருந்தார்.

மாசத்துல ஒரு முறை ஏதாவது சினிமாவுக்கு அழைத்துப் போவார். (அப்படிப் போகும்போது படத்தில் ஃபைட் சீன் வந்தால் அந்த வயசுலயே எழுந்து விசில் அடிப்பேன், அவங்களை மாதிரி காத்துல ஃபைட் பண்ணுவேன்.



எங்கப்பா ஓரக் கண்ணால் பார்த்து ரசிப்பார்) படம் முடிஞ்சு வரும்போது அப்படியே ஹோட்டலுக்கு கூட்டிப் போய் பிள்ளைங் களுக்கு வேண்டியதை வாங்கிக் கொடுப்பார்.

வருஷத்துக்கு ஒரு முறை கொடைக்கானல், ஊட்டி, மைசூர்னு ஒரு கார் வச்சு குடும்பத்தோடு அழைத்துப் போய் சுத்திக்காட்டி வருவார். தினசரி வீட்டுக்குத் திரும்பும்போது, எங்களுக்கு தின்பண்டங்கள் வாங்கி வர மறக்க மாட்டார்.

ஒரு நல்ல குடும்பத் தலைவரா, பாசமுள்ள தந்தையா, தொழிலில் நாணயம் உள்ளவரா, காங்கிரஸ் கட்சியில எல்லாருக்கும் தெரிஞ்ச நல்ல தொண்டரா... இப்படி பல நல்ல விஷயங்களில் எங்கப்பா என்னைக் கவர்ந்தவர். இன்னைக்கி எங்கிட்டே சில நல்ல பண்புகள் இருக்குன்னா, அதை எனக்குள் விதைச்சவர் அவர்தான்.

## எனக்கும் விஜிக்கும் உள்ள ஒற்றுமைகள்!

எனக்கும் விஜிக்கும் நிறைய ஒற்றுமைகள் உண்டு. உருவத்தில் மட்டுமல்ல, உள்ளத்திலும் பெயரிலும் கூட! தேர்ந்தெடுத்து செய்கிற கேரக்டர்களிலும் கூட அந்த ஒற்றுமை இருக்கிறது.

நான் கண்ணாலயும் பார்த்திருக்கேன், காதாலயும் கேட்டிருக்கேன். தான் மட்டும் நல்லாயிருந்தால் போதாது, மற்றவர்களும் நல்லாயிருக்கணும்னு நினைக்கிற அவருடைய மனப்பான்மை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. அது ரொம்ப பாராட்டப்பட வேண்டிய விஷயம். நண்பர்களைக் கைவிடாமல் அவர்களையும் தன்னுடன் சேர்த்துக்கொண்டு, ஒரு தயாரிப்

# விஜயகாந்த் பற்றி வி.ஜ.பி!

எங்கப்பா ரொம்பக் கஷ்டப்பட்டு தான் வாழ்க்கையில முன்னுக்கு வந்தார். அவர் கொஞ்சம் கொஞ்சமா சேர்த்த பணத்துல முனி சாலையில் ஒரு ரைஸ் மில்ல லீசுக்கு எடுத்தார். அதுல ராத்திரி பகல்னு பார்க்காம உழைத்தார்.

அப்போது ஒரு ஜோசியர் சொன்


• விஜயகாந்த் அமர்ந்திருந்த ரைஸ் மில் நாற்காலி!


• நாகராஜ் ரைஸ் மில்

பாளராக, பார்ட்னராக உயர்த்தியுள்ளார்.



விஜி கம்பெனியில் நடித்தவர்கள் எங்க கூட ஒர்க் பண்ணும்போது, "இதுவே விஜி கம்பெனியாயிருந்தால் எப்படி இருந்திருக்கும் தெரியுமா?" என்று ஒவ்வொரு விஷயத்திலும் சொல்வார்கள்.

இவ்வளவு சின்ன வயசுல... இவ்வளவு குறுகிய காலத்துல, அவர் பேரும் புகழும் அடைந்ததற்குக் காரணம், அந்த நல்ல உள்ளம், உயர்ந்த எண்ணம், கடும் உழைப்புதான்!

பி.மாதவன் டைரக்‌ஷனில் நான் செய்த 'என் கேள்விக்கு என்ன பதில்?' படத்துல, அவர் நடிப்பதாக இருந்ததை நான் தட்டிப் பறித்துக் கொண்டதாக நிறைய பேர் பேசிக்கொண்டார்கள். அவருக்கு என்னைப் பற்றி நல்லாத் தெரியும். என்னால் ஒருத்தருக்கு சாப்பாடு போட முடியாவிட்டாலும், வயிற்றில் அடிக்க மாட்டேன்.

விஜி, ஆக்‌ஷன் ஹீரோவாகவே அறிமுகமாகி விட்டார். ஜனங்க பணம் கொடுத்துப் படம் பார்க்க வருகிறார்கள். அவர்கள் எதை எதிர்பார்க்கிறார்களோ அதைக் கொடுக்க வேண்டும் என்று நினைக்கிறார். அவர் எப்போதும் நன்றாக இருக்க வேண்டும். அவருக்கு எந்த ஒரு பிரச்னை என்றாலும் தோள் கொடுக்க நான் தயாராக இருக்கிறேன். அதேபோல் எனக்கு அவரும் தோள் கொடுக்கக் காத்திருப்பார்"

**(ரஜினி - 1989-ல் விஜயகாந்த் பற்றிச் சொன்னது)**

னாராம்; 'உனக்கு முதலில் ஒரு பெண் குழந்தை பிறக்கும், இரண்டாவதாக ஒரு ஆண் குழந்தை பிறக்கும்போது, இந்த ரைஸ்மில் உனக்குச் சொந்தமாயிடும்'னு. அவர் சொன்னபடியே நடந்ததால், முதலில் வாங்கிய அந்த ரைஸ்மில்லுக்கு 'நாகராஜ் ரைஸ் மில்'னு எங்கண்ணன் பெயரை வெச்சார்.

எங்கண்ணா பிறந்த பிறகு வாழ்க்கையில பல வளர்ச்சிகள் வர ஆரம்பிச்சுதுனு, அண்ணன் மேல் அப்பா நிறைய அன்பு காட்டுவார். அவர் என்ன கேட்டாலும் உடனே வாங்கிக் கொடுத்துடுவார்.

வடநாட்டு சேட்டுகள் கல்யாணம் மாதிரி, நாகராஜ் அண்ணன் ஸ்கூலில் சேர்த்த நாளை விசேஷமாகக் கொண்டாடினோம். அலங்கரித்த குதிரைமேல் அண்ணனை உட்கார வைத்து, பேண்டு வாத்தியங்கள் முழங்க, படு அமர்க்களமாக அவர் ஸ்கூலுக்கு அழைத்துப் போய் சேர்க்கப்பட்டார்.

அடுத்து என்னை ஸ்கூலில் சேர்க்கப் போவதாகப் பேச்சு அடிபட்டதும், எனக்குள் கலவரம் ஆரம்பமாயிடுச்சு. வாத்தியார் அடிப்பார், ஒரே இடத்துல உட்கார்ந்திருக்கணும், நானே ராஜா, நானே மந்திரினு தெருப் பசங்களோடு சுதந்தரமாக விளையாட முடியாது. சேட்டை பண்ண முடியாது. ஸ்கூல்னு சொன்னதும் என்னைக் கலவரப்பட வெச்சது மேற்படி விஷயங்கள்தான்.

ஸ்கூலுக்குப் போக மாட்டேன்னு சொல்ல முடியாது. சொன்னா அடி உதை தான். அப்போ என்ன பண்றது...? ஸ்கூலுக்குக் கூப்பிட்டு போற அன்னிக்கி எங்காவது எஸ்கேப் ஆகி மறைஞ்சுடலாம் அம்புட்டுதான்...னு முடிவு செஞ்சேன். ஆனா நடந்ததே வேற...

*(சொல்றேன்)*

படங்கள்: **சஜோ**

# 2015-ல் ஒரு தமிழ் சினிமா கதை!

**(தமிழ் சினிமாக்களில் 'காதல்' சித்திரிக்கப்படுகிற விதத்தைப் பார்க்கும்போது, வருங்காலத்தில் திரைக்கதை பற்றிய டிஸ்கஷன் இப்படி இருந்தால் வியப்பதற்கில்லை)**

**டைரக்டர் :** ஸார்... கதை கொஞ்சம் கூட நம்பும்படியா இல்லை. அவ்வளவு சூப்பரா வந்திருக்குது. நீங்க கதையைக் கேட்டு ஓ.கே. பண்ணிட்டா, இந்த மாசமே பூஜையைப் போட்டுடலாம்.

**தயாரிப்பாளர் :** கதை எனக்குப் பிடிக்கணுங்கற அவசியமே இல்லை. இளைஞர்களுக்குப் பிடிக்கணும். அதான் முக்கியம். மத்தபடி எவ்வளவு கண்றாவியா இருந்தாலும் பரவாயில்லை.

**கதாசிரியர் :** (பெருமையுடன்) என் கதை எப்பவுமே அப்படித்தான் ஸார் இருக்கும். எங்கேயாவது என்னையும் மீறி கதை டீஸண்டா வந்தா சொல்லுங்க. மாத்திடறேன்.

**தயா :** வெரிகுட்! ஏன்னா, எக்கசக்கமா பணம் போட்டுப் படம் எடுக்கறோம். தரமான படம்னா டிஸ்ட்ரிப்யூட்டருங்க முகத்தைச் சுளிப்பாங்க. பேர் கெட்டுடும். அதுக்காகச் சொன்னேன். சரி, என்ன கதை?

**கதா :** ஹீரோ ஒன்பதாவது படிக்கிறான். ஹீரோயின் எட்டாவது படிக்கிறா. இவங்க காதல் எப்படி ஜெயிக்குதுன்றதுதான் கதை.

**தயா :** என்ன? ஸ்கூல் பசங்க காதலா? வழக்கமா காலேஜ்லே லவ் பண்ற மாதிரி தானே எடுப்போம்?

**டைர :** இப்ப ட்ரெண்ட் மாறிடுச்சு ஸார். ஹைஸ்கூல்லேயே காதலிச்சாத்தான் ரியலிஸ்டிக்கா இருக்கும். நியாயமாப் பார்த்தா எலிமெண்டரி ஸ்கூல்னு காட்டறது தான் முறை. அவ்வளவு சின்னப் பசங்களுக்கு டயலாக் சரியா பேச வராதேன்னு, ஹைஸ்கூல்லே காதலைக் காட்டறோம்.

**தயா :** சரி, ஏதோ ஒண்ணு. மேலே சொல்லுங்க.



**கதா :** முதல் நாள் ப்ரேயர்லயே ரெண்டு பேருக்கும் காதல் வந்துடுது ஸார். ஹீரோ பக்கத்தில நிக்கற பொண்ணைப் பார்த்து, 'ஏய்... ரொம்பப் போரடிக்குது. நாம ரெண்டு பேரும் லவ் பண்ணலாமா'ன்னு கேக்கறான். அந்தப் பொண்ணு 'எனக்கும் யாரையாவது காதலிக்கணும்னுதான் தோணுது. இத்தனை பசங்கள்லே யாரை காதலிக்கிறதுன்னே தெரியலை. அதான் ஒரே கவலையா இருந்தது. இப்பப் பெரிய பிரச்னை தீர்ந்தது'ன்னு சொல்றா.

**டைர :** ப்ரேயர் நடக்கும்போதே, ஹீரோ சங்கரும் ஹீரோயின் சித்ராவும் கற்பனையிலேயே டூயட் பாடறாங்க. 'எட்டாங் கிளாஸில் மிட்டாய் தின்னும் கட்டிப் பொண்ணே'ன்னு ஒரு பாட்டை கவிஞர்கிட்டே வாங்கிட்டேன்.

**கதா :** ஒரு நாள் ஹீரோ, வேணும்னே வாத்தியார் கேக்கற கேள்விக்கெல்லாம் தப்புத் தப்பா பதில் சொல்றான்.

**தயா :** ஏன்?

**கதா :** அப்பதான் வாத்தியார் அவனை பெஞ்சு மேலே ஏறி நிக்கச் சொல்லுவாரு. பெஞ்சு மேலே ஏறி நின்னாத்தான் எட்டாங் கிளாஸ் படிக்கிற ஹீரோயினை ஜன்னல் வழியா பாக்க முடியும்.



**தயா** : சூப்பர். காதல் படிப்படியா வளருதுங்கறதை இதைவிட அருமையா காட்ட முடியாது.

**உதவி டைர** : ஸார்... படம் ஃபைட்டே இல்லாம போவுது. அங்க ஃபைட்டாவது வேணும்.

**கதா** : ஃபைட் இல்லாம சினிமா எடுக்க முடியுமா? வில்லன் பத்தாம் கிளாஸ் படிக்கிறான். திடீர்னு ஒரு நாள் சித்ராவை மிரட்டறான். 'ஏய் உன்னை என்ன கல்யாணமாடி பண்ணிக்கச் சொல்றேன். காதலிக்கத்தானேடி சொல்றேன். அதுகூட முடியாதுன்னா என்னடி அர்த்தம். திமிரா'ன்னு கத்தறான். அப்ப திடீர்னு ஹீரோ சங்கர் அங்கே வர ஒரே சண்டை. அம்பத்தூர் ஸ்கூல்லே ஆரம்பிக்கிற சண்டை, அண்ணா சாலையிலே போற பஸ்ஸுங்க மேலே தாவித் தாவி, அப்படியே மெரினா பீச்சுக்குப் போய் அங்கேயிருந்து வண்டலூர் ஜூவிலேயும் தொடர்ந்து நடக்குது.

**கதா** : அப்பதான் கதையிலே ஒரு பயங்கரத் திருப்பம் ஏற்படுது.

**தயா** : என்ன?

**கதா** : ஹீரோவை வில்லன் ஆளுங்க எல்.ஐ.ஸி. மேலேருந்து கீழே தள்ள, அவன் தலையிலே அடிபட்டு மூளையிலே இருக்கிற காதல் நரம்பு டேமேஜ் ஆயிடுது. அதனாலே திடீர் திடீர்னு அவன் 'காதல் ராட்சசனா' மாறிடறான். 'இர்ரெகுலர் லவ் ஹாரர்'னு டாக்டர் அந்த வியாதிக்கு பேர் வெக்கறாரு.

**டைர** : அந்த வியாதி வரும்போது ஒரே கையாலே பில்டிங்கையே நகத்திட முடியும். வியாதி போனதும் பயந்தாங்கொள்ளியா மாறிடுவான். அதாவது காதலியைப் பார்த்தா அந்த வியாதி வந்துடும். அவளைப் பாக்க முடியலைன்னா வியாதி போயிடும்.

**தயா** : சூப்பர் வியாதியா இருக்குதே.

**கதா** : அந்த 'இர்ரெகுலர் லவ் ஹாரர்' வியாதியை வெச்சுகிட்டு கதையிலே இஷ்டத்துக்கு விளையாடிருக்கோம்.

**உதவி டைர** : இருந்தாலும் அது போதாது ஸார். காதல் வெறியைக் காட்டினாத்தான் இளைஞர்கள், கும்பல் கும்பலா

## துக்ளக் சத்யா

ஸ்கூலுக்கும் காலேஜுக்கும் 'கட்' அடிச்சுட்டு தியேட்டருக்கு வருவாங்க. அப்படி இளைஞர்களுக்கு விழிப்புணர்வு ஏற்படற மாதிரி ஸீன் வையுங்க.

**கதா :** வெச்சிருக்கேன். இவங்க காதலைப் பார்த்து பயந்து போன ஹீரோயினோட அப்பா அவளைக் கூட்டிகிட்டு அமெரிக்காவுக்குப் போயிடறாரு. ஹீரோ வேகமா சைக்கிள்லே ஏர்போர்ட்டுக்கு வரும் போது விமானம் புறப்பட்டுடுது.

**தயா :** அடப்பாவமே!

**டைர :** அப்ப அவனுக்கு ஒரு யோசனை தோணுது. பாக்கெட்லேர்ந்து காதலி படத்தை எடுத்துப் பார்க்கறான். உடனே காதல் பயங்கரவாதியா மாறிடறான். ஃபோட்டோவை சைக்கிள் மேலே ஒட்டி, அதை பாத்துக்கிட்டே வெறி பிடிச்ச மாதிரி சைக்கிள்லேயே அமெரிக்கா போய் சேர்ந்துடறான்.

**தயா :** சைக்கிள்லேயே அமெரிக்கா போயிட முடியுமா?

**டைர :** அதான் அந்த வியாதியோட சக்தி. மேலே ஏராப்ளேனே காட்டறோம். கீழே சைக்கிளைக் காட்டறோம். மாத்தி மாத்திக் காட்டினா ரசிகர்கள் ஏத்துப்பாங்க. அமெரிக்கா ஏர்போர்ட்லே அவங்களுக்கு முன்னாலே இவன் போய் நிக்கறான்.

**கதா :** ஹீரோயினோட அப்பா அங்கே இருக்கிற தீவிரவாதிகளுக்கு பணம் கொடுத்து அவனை ஒழிக்கச் சொல்றாரு. ஒரு தீவிரவாதி நைஸா சைக்கிள்லே இருக்கிற காதலி ஃபோட்டோவை கிழிச்சதும் ஹீரோ திடீர்னு பயந்தாங்கொள்ளி ஆயிடறான்.

**டைர :** தீவிரவாதிங்க அவனை முப்பத்தஞ்சு நிமிஷம் அடிச்சுத் துவைச்சு, அவன் வயித்திலே ஈட்டியைச் செருகினதும், அது முதுகு வழியா வெளியே வர, ரத்தம் ரோடெல்லாம் ஓடுது. பொணம் மாதிரி ஹீரோ கீழே விழறான்.

**கதா :** சித்ராவும் அவங்க அப்பாவும் இன்னொரு ஃப்ளைட்ல ஏறிடறாங்க. ஏரோப்ளேன் மேலே போனதும் ஹீரோயின் அங்கேயிருந்து, கீழே ஹீரோ விழுந்திருக்கிறதைப் பாக்கறா. உடனே தன் ஃபோட்டோவை எடுத்து ஹீரோ மேலே போடறா. அது அவன் மேலே விழுது.

**தயா :** கொஞ்சம்கூட நம்ப முடியலையே. படு அபத்தமா இருக்குதே.

**டைர :** அப்ப கதை சரியான ரூட்லே போகுதுன்னு அர்த்தம். எதையாவது சொல்லிக் கெடுத்துடாதீங்க.

**கதா :** அந்த ஃபோட்டோ ஹீரோ மேலே விழுந்ததும், சடார்னு கண் விழிச்சு, ஈட்டியோடயே சைக்கிள்லே ஏறி, அப்படியே அமெரிக்காவிலேர்ந்து இந்தியாவுக்கு வந்துடறான்.

**தயா :** படம் எப்படி முடியுது?

**கதா :** அவங்க காதல் புனிதமானதுன்னு புரிஞ்சுகிட்ட அவங்க அப்பா ரெண்டு பேரையும் சேர்த்து வெச்சிடறாரு.

**டைர :** அதே ஸ்கூல்லே ஹீரோவும் ஹீரோயினும் ப்ளஸ் டூ படிக்கிறாங்க. அவங்க குழந்தை எல்.கே.ஜி.யிலே சேருது. அப்ப சுபம் போடறோம்.

**தயா :** சென்ஸார்லே பிரச்னை பண்ணுவாங்களா?

**டைர :** அதுக்கும் ஐடியா இருக்குதுங்க. படு ஆபாசமான காட்சிகளைச் சேர்த்துக் காட்டறோம். சென்ஸார்ல பயந்து போய், அதை நீக்கணும்னு சொல்லி சர்டிஃபிகேட் குடுத்துருவாங்க. ஆனா நைஸா அந்தக் காட்சிகளையும் சேர்த்து ரிலீஸ் பண்ணிடறோம்.

**தயா :** ஐயையோ! யாராவது கேஸ் போடுவாங்களே!

**கதா :** போடட்டுமே ஸார். கோர்ட் தீர்ப்பு வரதுக்குள்ளே படம் 150 நாள் ஓடி, டி.வி.யிலும் ரெண்டு தடவை போட்டுருவான். கோர்ட் தடை விதிச்சா, படத்தைப் பாக்கத் தவறிய கொஞ்ச நஞ்ச பேரும் திருட்டு வி.ஸி.டி. வாங்கிப் பாத்துருவாங்க. ●

"டிக்கெட் எடுக்காம எப்படி ஊரிலேயிருந்து வந்தே?"

"டிரெயின் கிளம்பினவுடனேயே டிக்கெட் பரிசோதகருக்கு மயக்க பிஸ்கட் கொடுத்திட்டேன்."

– கிஷ்ரு



# வால்வும் வாழ்வும்!



மது பாட்டில் மீது 'குடி குடியைக் கெடுக்கும்', சிகரெட் பாக்கெட்டின் மீது 'சிகரெட் பிடித்தல் உடல் நலத்திற்கு தீங்கானது', பான்மசாலா பாக்கெட்டில் 'பான்மசாலா உபயோகிப்பது உடல் நலத்திற்குக் கேடு' என்றெல்லாம் மைக்ரோ சைஸில் எழுதப்பட்டுள்ளன. தீங்குகள் இவற்றால் மட்டுமா? கீழ்காண்பவற்றாலும் உண்டு. சரி, இவற்றின் மீது எழுதினால் என்ன எழுதலாம்?

☺ ஃப்பிரிட்ஜ் மீது : ஒரு வாரத்திற்கு மேலான குழம்பு குடல் நலத்திற்குத் தீங்கானது.

☺ வாஷிங் மெஷின் மீது: கணவனை அதிகம் துவைப்பது சம்பள நலத்தைக் கெடுக்கும்.'

☺ செல் ஃபோன் மீது: கடலை போடுவது பர்ஸ் நலத்திற்கு கேடு.

☺ டீ.வி. மீது: அருகில் அமர்ந்து பார்ப்பது கண்ணுக்குக் கேடு.

☺ கிரெடிட் கார்ட் மீது: கடன், நிம்மதியைக் குலைக்கும்.

☺ பைக் மீது : பில்லியன் சீட் பெண்கள், விபத்துக்கு வழி!

☺ குக்கர் மீது : எண்ணிக்கை வைக்காத விசில் சாப்பாட்டைக் குழைக்கும்.

☺ வாட்டர் ஹீட்டர் மீது : சம்சாரம் அல்ல மின்சாரம்! தள்ளி நில்!

☺ பெண்கள் முகம் பார்க்கும் கண்ணாடி மீது: அதிகமாய் கண்ணாடி பார்ப்பது க்ரீமுக்குக் கேடு!

☺ வாட்டர் கேன் மீது: ஒரு வாய் தண்ணீர்; ஒரு குடம் தண்ணீர்.

☺ கேஸ் சிலிண்டர் மீது: வால்வை மூட மறந்தால் வாழ்வு நிலைக்காது!

☺ பாத்ரூம் ஷவர் மீது : தண்ணீர்த் தொட்டிதான் பெஸ்ட்!

- வீ. விஷ்ணுகுமார்

## கந்தப்ப பிள்ளை சொன்ன கதைகள் - 2

"திருவழுந்தூர்த் தம்பியை நான் முதன் முதலில் சந்தித்துப் பன்னிரண்டு வருடங்களுக்கு மேலிருக்கும். அப்போதுதான் அதனுடைய பெயர் பிரபலமாக ஆரம்பித்திருந்தது. ஒரு கோயில் கும்பாபிஷேகத்தில், தம்பியின் கச்சேரிக்கு என்னை தவுலுக்கு அழைப்பதற்கு வந்திருந்தார்கள். ஒரு மைனர் பையனின்

# திருவழுந்தூர் சிவக்கொழுந்து

கச்சேரிக்குப் போய் வாசிக்கிறதாவது என்று நினைத்து முதலில் சாக்குப் போக்குச் சொன்னேன். ஆனால் வந்தவர்கள் என்னை விடவில்லை. 'உங்களைத்தான் தவுலுக்கு அமர்த்த வேணுமென்று சிவக்கொழுந்து பிள்ளை பிடிவாதமாய்ச் சொல்லியிருக்கிறார். நீங்கள் ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும்' என்று வற்புறுத்தினார்கள். உடனே அப்படிப்பட்ட பையனைப் பார்க்க வேணுமென்று எனக்கும் தோன்றி, சம்மதம் கொடுத்து அச்சாரமும் வாங்கிக் கொண்டேன்.

கச்சேரி செய்யக் கிளம்பி இரண்டு வருஷத்துக்குள்ளே பிள்ளையாண்டான் இவ்வளவு பேர் எடுத்திருக்கிறானே, ஏதோ சுமாராய் ஊதுவான் என்று நினைத்துக் கொண்டுதான் போனேன். ஆனால், தம்பி நாயனத்தை வாயிலே வைத்து ஊத ஆரம்பித்தானோ இல்லையோ, இது சுமார் வாசிப்பில்லை. பிரமாதம் என்று தெரிந்து போயிற்று. அரைமணி வாசிப்பதற்குள் எனக்குப் பரவசமாய்ப் போய்விட்டது. மன்னார்குடி சின்னப் பக்கிரி, செம்பொன்னார் கோயில் ராமசாமி முதலிய மகாவித்வான்களின் பரம்பரைக்கு வாரிசாக வந்திருப்பவன் இந்தப் பிள்ளையாண்டான்தான் என்று தீர்மானித்து விட்டேன்.



என்னைத்தான் தவுலுக்கு வைக்க வேண்டுமென்று தம்பி வற்புறுத்திய காரணம் என்னவென்று தெரியவந்தது. என்னுடைய தவுல் வாசிப்பின் மேல் சிவக்கொழுந்துக்கு அபாரப் பிரியம். அது மட்டுமல்ல, கொஞ்ச காலமாகத் தம்பி எங்கே கச்சேரிக்குப் போனாலும் அங்கே சண்டையாக முடிந்து கொண்டி

**அமரர் கல்கி**

ருந்ததாம். தம்பியின் மேல் மற்ற நாதஸ்வர வித்வான்களுக்கெல்லாம் அவ்வளவு அசூயை உண்டாகியிருந்தது.

சாமி! புகழ் என்பது இருக்கிறதே, அது மகா பொல்லாதது. ஒரு மனுஷனுக்கு ஒரு பக்கத்தில் எவ்வளவு புகழ் பெருகுகிறதோ, அவ்வளவுக்கு இன்னொரு பக்கம் அவன் மேல் கோபமும் வளர்ந்து கொண்டிருக்கிறது. அதிலும் கலை, வித்வத் என்று சொன்னால் போதும். 'நேற்று முளைத்த இந்தப் பையன் இவ்வளவு நன்றாய் வாசிக்கிறதா? இவ்வளவு செல்வாக்கு அடைகிறதா?' என்று எல்லாருக்கும் ஒரே வயிற்றெரிச்சல். ஆகவே நாதஸ்வரக்காரர்கள் கூடுமிடமெல்லாம் திருவழுந்தூர்த் தம்பியை இகழ்ந்து பேசுவதே வேலையாய்ப் போயிருந்தது.

அதற்கு ஒரு மாதத்துக்கு முன்னால் ஒரு பிரசித்தமான கோயிலில் பங்குனி உற்சவத்துக்கு சிவக்கொழுந்தை வரவழைத்திருந்தார்களாம்.

உள்ளூர் நாயனக்காரர் ஒருவரும் வாத்தியம் வாசித்தார். உற்சவம் ஆரம்பித்ததிலிருந்து இரண்டு கோஷ்டிக்கும் புகைந்து கொண்டிருந்தது. திருக்கல்யாண உற்சவத்தின்போது மண்டபத்தில் கச்சேரி நடந்தது. தம்பி வாசித்துக் கொண்டிருக்கையில் உள்ளூர் நாயனக்காரரும் அவருடைய செட்டைச் சேர்ந்தவர்களும் பின்னால் உட்கார்ந்து கேலி செய்து கொண்டிருந்தார்கள். 'நாயனத்தை நிமிர்த்திப் பிடிக்கிறதா, தலை கீழாய்ப் பிடிக்கிறதா என்று தெரியாத பசங்களெல்லாம் கச்சேரி பண்ண வந்துடறாங்க' என்று ஒருத்தன் சொன்னானாம். 'கேட்கிறவனுக ஞான சூன்யங்களாயிருந்தால், எவன் வேணுனாலுந்தான் வாசிக்க வருவான்' என்றானாம் இன்னொருவன். இதெல்லாம் சிவக்கொழுந்தின் காதில் பட்டும் படாமலும் விழுந்து கொண்டிருந்தபோதிலும், அதைக் கொஞ்சமும் இலட்சியம் செய்யாமல் தம்பி வாசித்துக் கொண்டிருந்தது. ஆனால் உள்ளூர் செட்டின் தவுல்காரர் ஒருதடவை 'தாளம் தப்பிப் போச்சு!' என்று சொன்னபோது தம்பிக்குக் கோபம் வந்துவிட்டது. திரும்பிப் பார்த்து, 'யாரடா தாளம் தப்பிப் போச்சு என்று சொல்லுகிறவன்? முன்னாலேயே வந்து தாளம் போடுங்கடா!' என்று காரமாய்ச் சொல்லிற்று. தம்பியின் மேல் அபிமானம் உள்ளவர்கள் பக்கத்தில் பலர் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் ஒருவருக்குப் பிரமாதமாய்க் கோபம் வந்துவிட்டது. அவர் 'இவன்கள் கிடக்கானுக தம்பி, ரொம்ப தாளத்தைக் கண்டுட்டானுக! சோத்துக்குத் தாளம் போடறவனுகதானே! நீ பாட்டுக்கு வாசி' என்று சொல்லிவிட்டார். அவ்வளவுதான். கலகம் முற்றிவிட்டது. உள்ளூர் நாயனக்காரர் நாயனத்தைத் தூக்கி அடிக்க வந்தார். தவுல்காரர்கள் ஒருவரையொருவர் கோலினால் அடித்துக் கொண்டார்கள். ஜாலர்களைப் பிடுங்கி எறிந்தார்கள். சற்று நேரம் ஒரே அல்லோல கல்லோலமாய்ப் போய்விட்டது. தர்மகர்த்தா, குருக்கள் முதலியவர்கள் வந்து சண்டையை விலக்கி நிறுத்தினார்கள். பிறகு யார்மேல் குற்றம் என்று விசாரணை நடந்தது. சபையிலும் இரண்டு கட்சி. சிலர் உள்ளூர் அபிமானத்தின் மேல் உள்ளூர் நாயனக்காரர் கட்சியில் சேர்ந்து கொண்டார்கள். அதிகம் பேர் தம்பியின் மேல்தான் குற்றம் என்று தீர்மானித்து, 'நீ வாசித்தது போதும்; எழுந்து போகலாம்' என்று கட்டளையிட்டார். ஆனால், கோயில் குருக்கள் ஐயாவுக்கு, தம்பியின் வாசிப்பு என்றால் உயிர், ஆகையால் அவர், 'சிவக்கொழுந்து கோயிலை விட்டுப் போனால் நானும்



இதோ கிளம்பி விடுகிறேன்!' என்று ஆவேசம் வந்தவர்போல் கிளம்பி விட்டார். அப்புறம் மறுபடியும், மத்தியஸ்தம் பண்ண வேண்டியதாயிருந்தது.

இந்த மாதிரி ஒரு தடவை, இரண்டு தடவை இல்லை; பல தடவைகளில் கலகம் நடக்கவே சிவக்கொழுந்து யோசனை பண்ணி, என்னை எப்படி யாவது தவுலுக்குச் சேர்த்துக் கொண்டுவிட வேண்டும் என்று முடிவு செய்தது. நான் அதோடே சேர்ந்துவிட்டால் அப்புறம் எவனும் வாலை ஆட்ட மாட்டான் என்று தம்பிக்கு அவ்வளவு நிச்சயம்.

இதெல்லாம், பிற்பாடு தம்பியே மனசை விட்டுச் சொல்லித்தான் நான் தெரிந்துகொண்டேன். அது முதல் நாங்கள் இருவரும் சேர்ந்தே கச்சேரிக்குப் போகத் தொடங்கினோம். மற்ற நாயனக்காரர்களுக்கெல்லாம் இதனால் என் பேரில் காய்ச்சல். என்னை பகிஷ்காரம் பண்ணுகிறது என்றும் தீர்மானம் செய்திருந்தார்கள். ஆனால், எனக்கு என்ன வந்தது சாமீ; உண்பது நாழி. உடுப்பது நான்கு முழ கதர் வேஷ்டி. சோற்றுக்கு, துணிக்கு ஏதோ பகவான் கொடுத்திருக்கிறார். 'கிடக்கிறான்கள்' என்று நான் அலட்சியமாய்த்தான் இருந்தேன்.

அந்தச் சமயத்தில் அவர்களுடைய பகிஷ்காரம் எல்லாம் எங்களை ஒன்றும் செய்யவில்லை. தினம் பொழுது விடிந்தால் கச்சேரிதான். தம்பியின் வாசிப்போ நாளுக்கு நாள் அபாரமாகிக் கொண்டிருந்தது. இதற்கு முன்னாலெல்லாம் நான் பணத்துக்காகத் தவுல் வாசித்துக் கொண்டிருந்தேன். தம்பிக்கு வாசிக்க ஆரம்பித்த பிறகு, என்னை மறந்து பரவசமாய் வாசித்தேன். ஸ்வாமி! அது என்ன மனோதர்மம்? அது என்ன கற்பனை? அது என்ன பொருளுதயம்? - இத்தனைக்கும் தம்பி, பெரியவர்கள் காட்டிய வழியிலிருந்து அந்தண்டை இந்தண்டை நகரவில்லை. இந்தக் காலத்திலே போல், ஒத்துக்குப் பதில் தம்புரா சுருதி வைத்துக் கொள்ளவில்லை. தவுலுக்குப் பதில் தபலா, அப்புறம் பக்க வாத்தியத்துக்கு ஹார்மோனியம், மோர்சிங்கு - இப்படியெல்லாம் ஒன்றும் கிடையாது -

இந்தச் சமயத்தில் நான் குறுக்கிட்டு, "பிள்ளைவாள்! தம்புரா சுருதியைப் பற்றி எதற்காக இவ்வளவு...?" என்று ஆரம்பித்தேன். நான் மேலே பேச அவர் இடம் கொடுக்கவில்லை.

"எனக்குத் தெரியும் சாமி, தெரியும், நீங்கள் தம்புரா சுருதியை ஆதரிக்கிறவர் என்று. அந்த விவகாரம் இப்போது வேண்டாம். திருவழுந்தூர்த் தம்பி அப்படியெல்லாம் புது வழிக்குப் போகவில்லையென்றுதான் சொல்கிறேன். ஆனாலும் வாசிப்பு அற்புதமாயிருந்தது. தேவகானம் என்றால் தேவகானந்தான். அதற்கேற்றாற்போல் நாளுக்கு நாள் செல்வாக்கும் அதிகமாகிக் கொண்டிருந்தது. பணம் வந்து குவிந்தது.

இதையெல்லாம் பார்க்கப் பார்க்க எனக்கு எவ்வளவோ சந்தோஷம் உண்டாயிற்று. ஆனால், ஒரே ஒரு விஷயம் மனத்திற்கு மிகவும் துன்பத்தைக் கொடுத்து வந்தது. கலைக்கும் வித்வானுக்கும் பெரிய சத்ரு எது தெரியாதா, சாமி! - தம்பிக்கும் அந்தக் கொடிய மதுபானப் பழக்கம் இருந்தது. எப்படியாவது அந்தப் பழக்கத்திலிருந்து தம்பியை விடுவிக்க வேண்டுமென்று நான் ஆத்திரம் கொண்டிருந்தேன். அடிக்கடி ஜாடைமாடையாகச் சொன்னேன். சில சமயம் தெளிவாகவும் சொன்னேன். தம்பிக்கு, என்னிடம் ரொம்ப பயபக்தி உண்டு. ஆகவே, நான் சொல்லும்போது பதில் பேசாமல் கேட்டுக் கொண்டிருக்கும். கெட்ட

பழக்கம் என்று அதுக்குத் தெரியாமலு மில்லை. ஆனால் விடுவதற்கு மட்டும் முடியவில்லை. ஏதோ, நான் சொல்லிக் கொண்டு வந்ததன் பயனாக, ரொம்ப மீறிப் போகாமல் கட்டுக்குள் இருந்தது. இந்த மட்டிலாவது இருக்கிறதே என்று நான் ஒருவாறு திருப்தியடைந்தேன்.

இப்படியிருக்கையில், மகாத்மா காந்தியின் உப்புச் சத்தியாக்கிரஹம் ஆரம்பமாயிற்று. தேசமெங்கும் அமளி துமளிப்பட்டது. எனக்கு ரொம்ப நாளாகவே தேசிய விஷயங்களில் சிரத்தை உண்டு என்று உங்களுக்குத் தெரியுமே! அந்த நாளில் அடிக்கடி பொதுக்கூட்டங்களுக்குப் போய்க் கொண்டிருந்தேன். சில சமயம் தம்பியையும் அழைத்துக் கொண்டு போவேன். அந்தக் கூட்டங்களில் தலைவர்களுடைய பேச்சுகளைக் கேட்டுக் கேட்டுத் தம்பியின் மனம் கனிந்து கொண்டிருந்தது என்பதை அறிந்தேன். கடைசியில், காந்தி மகானைக் கைது செய்து விட்டார்கள் என்ற செய்தி வந்தது. அன்று கும்பகோணத்தில் பிரமாண்டமான கூட்டம். பட்டணமே திரண்டு வந்தது போலிருந்தது. தம்பிக்கு இரண்டு வருஷமாகக் கும்பகோணத்தில்தான் ஜாகை. நானும் அடிக்கடி கும்பகோணம் வருவேன். அன்றைய தினம் பொதுக் கூட்டத்துக்கு நானும் தம்பியும் போயிருந்தோம். கூட்டத்தில் அன்று பேசியவர்கள் எல்லாரும் ரொம்பவும் உருக்கமாகப் பேசினார்கள். என் பக்கத்திலிருந்த தம்பியின் கண்களில் ஜலம் பெருகி வழிவதைப் பார்த்தேன்.

கூட்டம் ஒரு மணி நேரம் நடந்த பிறகு, திடீரென்று சலசலப்பு உண்டாயிற்று. கொஞ்ச தூரத்தில் போலீஸ்காரர்கள் கையில் குண்டாந்தடிகளுடன் கூட்டமாக வருவது தெரிந்தது. கூட்டங்களைத் தடியால் அடித்துக் கலைத்துவிடும்படி அன்றைய தினந்தான் மேலாவிலிருந்து உத்தரவு வந்ததாம். ஜனங்களுக்கு இது ஒன்றும் தெரியாது. அவர்களில் பெரும்பாலோர் திரும்பிப் பார்த்து, இது என்ன சமாசாரம் என்று யோசிப்பதற்குள் போலீஸ்காரர்கள் திடும் பிரவேசமாக கூட்டத்திற்குள் பிரவேசித்துத் தாறுமாறாக அடிக்கத் தொடங்கினார்கள். உடனே, கூட்டம் கலைய ஆரம்பித்தது. இரண்டு நிமிஷத்துக்குள் முக்கால்வாசிப் பேர் ஓடிப்போய் விட்டார்கள். கடைசி வரையில் இருந்தவர்களில் அடியேனும் ஒருவன். நான் ஓடவில்லை. தோளிலும் முதுகிலும் நாலைந்து அடி வாங்கிக் கொண்ட பிறகு மெதுவாகத்தான் அங்கிருந்து சென்றேன்.

தம்பி முன்னேயே ஓடிப்போய் எனக்காக ஒரு சந்தின் முனையில் காத்துக் கொண்டிருந்தது.



என்னைக் கண்டதும் வந்து கட்டிக் கொண்டு கண்ணீர் விட்டழுதது. இருவரும் அதிகமாகப் பேசாமல் வீட்டை நோக்கிச் சென்றோம். வழியில் கடைத் தெருவில் ஹனுமார் கோயிலண்டை வந்ததும் தம்பி, 'நில்லுங்க, அண்ணே!' என்று கூச்சல் போட்டது. அனுமார் சந்நிதியில் விழுந்து நமஸ்காரம் செய்து விட்டு எழுந்தது.

'ஸ்வாமி! ஆஞ்சநேயா! இன்று முதற் கொண்டு மதுபானம் என்பதைக் கண்ணாலும் பார்க்க மாட்டேன்; கையாலும் தொடமாட்டேன். சத்தியம்! சத்தியம்!' என்று பிரமாணம் செய்தது.

பாவி நான், அப்போது, சும்மா இருந்திருக்கக் கூடாதா? 'தம்பி! அனுமார் கலியுகத்தில் கண்கண்ட தெய்வம். அதிலும் கடைத்தெரு அனுமார் ரொம்ப சக்தியுள்ளவர். அவருடைய சந்நிதியில் பிரமாணம் செய்திருக்கிறாய். ஜாக்கிரதை! ஞாபகமிருக்கட்டும்' என்றேன்.

அப்போது தம்பி, 'அப்படி நான் என் பிரமாணத்தை மீறினால், என் தலையில் இடி விழட்டும்; என் கண் அவிந்து போகட்டும்' என்று உரத்த குரலில் சொல்லிற்று.

ஸ்வாமி! நிஜமாகச் சொல்கிறேன். அப்போது என் உடம்பெல்லாம் நடுங்கிற்று. ரோமங்கள் எல்லாம் குத்திட்டு நின்றன. 'அட பாவி! இவ்வளவு பயங்கரமான சபதம் ஏன் செய்தாய்?' என்று உரத்த குரலில் சொல்ல விரும்பினேன். ஆனால் நா எழவில்லை.

(தொடரும்)



இப்பொழுதெல்லாம் யாருக்குமே பேய் பயம் இருப்பதில்லை. தரையில் புரளும் வெள்ளைச் சேலை, தலையில் மல்லிகைப் பந்து, ஜல் ஜல் கொலுசு என்று வலம் வரும் தமிழ்ப் பட மோகினியாக இருந்தாலும் சரி, 'ஆ...ஊ....' என்று டிஜிட்டலில் மிரட்டும் நூதன ஹாலிவுட் பேயாக இருந்தாலும் சரி... யாருக்கும் ஒரு அவுன்ஸ் பயம் கூட இல்லை. சுத்தமாக குளிர் விட்டுப் போய்விட்டது. (ஆமாம், தமிழ்ப் பட பேய்கள் ஏன் எப்பொழுதும் சேலை கட்டுகின்றன? பேய்களுக்கு ஏதாவது 'ட்ரெஸ் கோட்' இருக்கிறதா?) பேய், பூதம், கொள்ளிவாய் என்றாலே விழுந்து விழுந்து சிரிக்கிறார்கள். குழந்தைகளைக் கூட 'பூதம் பிடிச்சிட்டு போய்டும்' என்று பயமுறுத்திச் சாப்பிட வைக்க முடியவில்லை. அமானுஷ்ய உலகின் அறைக் கதவை யாருமே தட்டுவதில்லை.

மேரி ரோச் என்பவர் எழுதி இப்பொழுது வெளிவந்திருக்கும் 'ஸ்கூப்' (Scoop) இறந்தவர்கள், இறந்த பிறகு என்னவாக மாறுகிறார்கள் என்பதை அறிந்து வாங்கிய நபர் போல் காணாமல் போய் விடுமா? தள்ளுபடி விலையில் வெள்ளைப் புடைவை வாங்கிக் கட்டிக்கொண்டு பேயாக மாறிவிடுமா? உண்மையில், பேய் இருக்கிறதா? இருக்கிறது என்றால், அது என்ன செய்து கொண்டிருக்கிறது? எங்கே வசிக்கிறது? வானத்திலா? ஒரு நடை இறங்கி வந்து நம்மைப் பயமுறுத்தக் கூட அதற்கு நேரம் இடைக்கவில்லையா?

பேய் என்றவுடன் மேரிக்கு ஏனோ இந்தியாவின் ஞாபகம் வந்திருக்கிறது. நிறைய அலைந்து திரிந்து மாந்திரீகர்களிடமும் ('பேய் இருக்குப்பா... சந்தேகமாயிருந்தா கூப்பிடவா?') மருத்துவர்களிடமும் ('யூ சி, சயின்ஸ் ஹாஸ் எ லிமிடேஷன்...') ஆராய்ச்சியாளர்களிடமும் ('இருக்குன்னு சொல்றாங்க. இல்லைன்னும் சொல்றாங்க. மை ஒபினியன்? இருக்கலாம்') பேசி பல சுவாரஸ்யமான விவரங்களைச் சேகரித்திருக்கிறார். பிறகு நிறுத்தி நிதானமாகக் கிண்டலடித்திருக்கிறார். வேதகால புராணங்கள் (குறிப்பாக மனு), உலக இலக்கியம், உலகப் போர் என்று பேய் பற்றிய குறிப்புகளை ஆங்காங்கே தெளித்திருக்கிறார்.

டிஷ் ஆண்டெனா, சாட்டிலைட் எதுவும் இல்லாமல் இறந்தவர்களோடு

# பேய் எங்கே? ஏன்?

கொள்ள முயல்கிறது. இதற்கு முன்பு அவர் எழுதிய புத்தகம் ஸ்டிஃப் (Stiff). இது பிரேதங்களைப் பற்றிய நகைச்சுவைப் புத்தகம். ஸ்கூப் கூட ஒரு வகையில் 'கலகல' புத்தகம்தான். என்ன செய்வது? விளையாட்டாகப் போய்விட்டது.

உடலிலிருந்து உயிர் பிரிவது தான் மரணம் என்றால் பிரிந்த உயிர் எங்கே, எப்படிப் பயணிக்கிறது? என்னவாக மாறுகிறது? காபி டம்ளர் புகை போல வளைந்து வளைந்து காற்றோடு கலந்து விடுமா? முக்காடு போட்டுக் கொண்டு கடன் தொடர்பு கொள்ளும் மீடியம்களை (இன்கமிங், அவுட்கோயிங் கட்டணம் உண்டு) சந்தித்திருக்கிறார். தானும் ஒரு மீடியமாக மாற முடியுமா என்ற ஆசையுடன் அதற்கான பிரத்யேக பயிற்சிப் பள்ளிக்குச் சென்று, எலக்ட்ரோ மேக்னடிக் கதிர்களை தனது மூளைக்குள் வரவேற்று ஏதேனும் அமானுஷ்ய மாற்றங்கள் நிகழ்கிறதா என்று ஆராய்ந்திருக்கிறார். ம்ஹூம். பேயின் வெள்ளை ஸ்கர்ட் நுனியைக் கூடப் பார்க்க முடியவில்லை.

வர்ஜீனியாவிலுள்ள ஒரு அறுவை சிகிச்சை அறைக் கூரையில், உயிர் பிரிந்தால் அது எந்த வழியாகப் போகிறது என்பதைக் கண்டு கொள்ள ஒரு நூதன கருவியைப் பொருத்தியிருக்கிறார்களாம். டுன்கன் மெக்டொகல் எனும்



உலகம் இவ்வளவுதான்!

புகழ்பெற்ற அறுவை சிகிச்சை மருத்துவர் ஒரு பேய் பிரியர். ஒருவன் இறந்த பிறகு அவனது உயிர் கோபித்துக் கொண்டு தனிக்குடித்தனம் கிளம்பும் என்றும் அதைப் பிடித்து இழுத்து வந்து அளவளாவலாம், கையைப் பிடித்து நடந்து கொண்டே பேசலாம், அதன் எடையை அவுன்ஸ் கணக்கில் அளந்து கொள்ளலாம் என்றெல்லாம் அளந்திருக்கிறார். எலிஸபெத் டெய்லர் மரணத் தருவாயில் சில அற்புதக் காட்சிகளை கண்டிருக்கிறாராம். கிட்டத்தட்ட பிரிந்து போன அவரது உயிர் சில காரணங்களால் திரும்பவும் புவிக்கு அனுப்பப்பட்டிருக்கிறதாம். சித்ரகுப்தனின் 'லெட்ஜர் அக்கவுண்டிங்' பற்றியும் யமதர்மராஜாவின் 'இயர் என்ட் ஆடிட்டிங்' பற்றியும் கூட மேரி ரோச் சொல்லியிருக்கலாம்.



# எப்படி?

மொத்தத்தில் கடைசி வரைக்கும் பேயைக் கண்டுபிடிக்கவே முடியவில்லை. ஆனால் பேய் போல் சப்தமிடாமல் யேல் நூலகத்திற்குள் புகுந்து நூதனத் திருட்டை நிகழ்த்தியிருக்கும் ஃபோர்ப்ஸ் ஸ்மைலி என்பவரைக் கையும் களவுமாகக் கண்டு பிடித்து விட்டார்கள். இவர் திருடியிருப்பது சில அரிதான வரைபடங்களை. புத்தகம், பேனா இவற்றோடு ஒரு ப்ளேடையும் கொண்டு வந்திருக்கிறார் ஸ்மைலி. விடிந்தால் முழுப் பரீட்சை என்பது போல், ஒவ்வொரு புத்தகமாக எடுத்து புரட்டோ புரட்டென்று புரட்டியிருக்கிறார். சிறிது நேரம் சென்ற பிறகு ப்ளேடை உருவி, நிறுத்தி நிதானமாக பிட்ஸாவை வெட்டுவது போல் ஒவ்வொரு வரை படமாக வெட்டும் போது மாட்டிக் கொண்டு விட்டார் ஸ்மைலி.

ஒரு வரைபடத்தின் விலை 1,50,000 அமெரிக்க டாலர்கள். பெட்டிநிறைய இங்கிலாந்தும் அமெரிக்காவும் ஆப்பிரிக்காவும் ஆசியாவும் பிடிபட்டிருக்கின்றன. கேட்டால் இதற்கு ஒரு சப்பைக்கட்டு கதையைச் சொல்கிறார் ஸ்மைலி. நிறைய படித்தவராம். புத்தகங்கள் என்றால் உயிராம். சிரமப்பட்டு பல அரிய வரைபடங்களை காசு கொடுத்து வாங்கி சேமித்து வைத்திருந்தாராம். ஆனால் ஒவ்வொன்றாகக் காணாமல் போய்விட்டதாம். மனமுடைந்து, வேறு வழியின்றித் துண்டு ப்ளேடைக் கையில் எடுத்தாராம். ஸ்மைலியின் புத்தக ஆர்வத்தை வெகுவாக மெச்சிய அதிகாரிகள், இந்த அற்புத வாசிப்பாளர் இதற்கு முன்பு எந்தெந்த நூலகங்களுக்கு துண்டு ப்ளேடோடு சென்றிருக்கிறார் என்று தற்பொழுது ஆராய்ந்து வருகிறார்கள்.

- மருதன்

அன்றாட வாழ்வில் நாம் தீவாக இருப்பது சாத்தியமில்லை. வாழ்க்கை ஒரு கூட்டு முயற்சி; அதில் பலரது பங்களிப்பும் இருந்தால் தான் நாம் வெற்றிகரமாகச் செயல்பட முடியும் என்று நான் நம்புகிறேன். கூட்டுக்குடும்பங்களிலிருந்து தனிக் குடும்பங்களுக்குப் பலரும் மாறி விட்டதால், தனி நபருடைய பொறுப்புகள் கூடிவிட்டன. ஒருவர் மகனாக, சகோதரராக, கணவனாக, மருமகனாக, தந்தையாக, பணியாளராக, நண்பனாக என்று (பெண்பாலுக்கும் சொல்லிக் கொள்கிறேன் - மகளாக, சகோதரியாக... என்று) பல பாத்திரங்களை ஏற்றுச் செயல்படும் போது, சிறப்பாகச் செயல்பட நினைக்கலாம்; ஆனால், இன்றைய எக்ஸ்பிரஸ் வேக உலகில் ஒவ்வொரு பாத்திரமும் ஒன்றுக் கொன்று முரண்படுகையில், குற்ற உணர்வு, பொறுமையின்மை, ஏமாற்றம், வருத்தம் போன்ற உணர்வுகள் அழுத்தலாம்.

மணமான பின்பும் இதே வழக்கம் தொடர்வது, விமலாவுக்கு வினோதமாக இருந்தது. பெற்றோருக்குப் பணம் கொடுப்பதை அவள் தடுக்கவில்லை; ஆனால் இந்தச் செயலில் தனக்கு உரிய மனைவி என்கிற அந்தஸ்தை



# மனம் தேடும் மந்திர வட்டம்!

ஒரு கணவன் - மனைவி சூழ்நிலையை எடுத்துக் கொள்வோம். விமலாவும் முருகனும் (கற்பனைப் பெயர்கள்) திருமணம் செய்து கொண்டு ஐந்து வருடங்கள் ஆகின்றன. முருகன் அத்தனை வெளிப்படையாகப் பேசாதவர்; முரட்டுத்தனம் இல்லாதவர். மணமானதிலிருந்து இருவருக்கும் ஒரே விஷயத்தில்தான் பிரச்னை வரும். திருமணத்துக்கு முன்பு, முருகன் தன் தாயிடம் தனது சம்பளப் பணத்தைக் கொடுத்துவிட்டு, அவ்வப்போது தனது செலவுக்குப் பணம் வாங்கிப் போவார்.

முருகன் கொடுக்கவில்லை என்று அவள் நினைத்தாள்; வெளிப்படையாக கணவனிடம் பல விதத்தில் சொல்லிப் பார்த்தாள். ஊஹூம், ஒரு மாற்றமும் வரவில்லை. மிஞ்சிப்போனால் முருகன், 'உனக்கு என்ன குறை? எது வேண்டுமானாலும் கேள்; வாங்கித் தரேன்' என்றோ 'அம்மா வருத்தப்படுவாங்க' என்றோ சொல்லி அவள் வாயை அடைக்கப் பார்ப்பார். ஒரு சின்னப் பொருள் வாங்கக்கூட மாமியாரிடம் கையேந்தி நிற்கும் நிலை, விமலாவுக்கு பிடிக்காமல் போனது. ரோசப்பட்டுக் கொண்டு விமலா எதுவுமே வாங்காமல் (பிறந்த நாளைக்குக் கணவன் வாங்கிக்

கொடுத்த புடைவையைக்கூட கட்டப் பிடிக்காமல்) புழுங்கி, கோபப்பட்டு மனம் சோர்ந்து போனான். இதில் யாருடைய உணர்வு சரி, யாருடையது தவறு என்கிற சர்ச்சையை விடுங்கள்... ஏன் இப்படி நடக்கிறது?

'நான் நல்ல மகனாக இருக்க வேண்டுமா? அல்லது நல்ல கணவனாக இருக்க வேண்டுமா?' இதுதான் முருகனது போராட்டம். வெளிப்படையாகப் பேசிப் பழக்கமில்லாத முருகனுக்கு, மனைவியின் கருத்



# சொந்தங்கள் வாழ்க!

## மனநல ஆலோசகர் பிருந்தா ஜெயராமன்



2

துப்படி செயல்படும் எண்ணம் இருந்ததோ, இல்லையோ - தெரியாது. தெளிவாக எனக்குப் புலப் படும் விவரம், முருகன் இரண்டு பக்கமும் நல்ல பெயர் எடுக்க நினைக்கிறார். எல்லாரிடமும் நல்ல பெயர் எடுக்க நினைப்பவருக்கு, அது நடக்கா விட்டாலும் மத்தளம் மாதிரி இரண்டு பக்கமும் அடிவிழும் என்பது நிச்சயம்! மனைவிக்காகத் தாயை ஒதுக்கச் சொல்கிறேன் என்று தவறாகப் புரிந்து கொள்ள வேண்டாம். இவர், தனக்கு எது வேண்டும் என்று தீர்மானித்து, அதை சம்பந்தப்பட்ட நபரிடம் (அம்மாவோ, மனைவியோ) பக்குவமாக, அவர் மனம் புண்படாமல், எப்படி விளக்குவது என்று சிந்தித்துச் செயல்பட்டால் பிரச்னை தீரும்.

ஒரு நண்பர் காலையில் அலுவலகம் வரும்போது,

அன்று மாலை நடக்கப் போகும் பள்ளி விழாவுக்கு கட்டாயம் வருவதாக மகளிடம் சொல்லி விட்டுப் போனார். (குழந்தை ஒரு நடனத்தில் பங்கேற்றாள்; தவிர பரிசும் வாங்கினாள்.) மாலை நேரம் ஆக, ஆக அலுவலகத்தில் இருந்த வேலைகளில் அவர் மூழ்கிவிட, வர முடியாமல் போயிற்று. குழந்தையை ஏமாற்றுகிறோமே என்கிற வருத்தம் மிஞ்ச, மனைவியை மொபைலில் கூப்பிட்டு, குழந்தைக்குத் தன் சார்பாக விளக்கும் பொறுப்பையும் அவரிடம் விட்டுவிட்டார். என்ன நடந்திருக்கும், சொல்லுங்கள்? மனைவியிடமிருந்து செல்போனில் பாதி ஸஹஸ்ரநாமம், வீடு திரும்பியதும் மீதி! தந்தையைக் கண்டதும் அழும் மகளைப் பார்த்து, அவரது குற்ற உணர்வுகூடியது. அவளைச் சமாதானம் செய்யும் விதத்தில், வெளியே கூட்டிக் கொண்டுபோய் நூறு ரூபாயை வெட்டு விட்டதும் தான் குற்ற உணர்வு குறைந்தது! ('அழுதால் எனக்குப் பரிசு கிடைக்கும்' என்கிற எதிர்பார்ப்பைக் குழந்தையிடம் வளர்த்து விடுவது சரியா? - முக்கியமான கேள்வி: இது பற்றி பிறகு பேசுவோம்.)

இந்தச் சூழ்நிலையில் மூவரது மனநிலையையும் பார்ப்போம். கணவனுக்கு, 'நான் நல்ல தந்தையாக இல்லை' என்கிற குறை; மனைவிக்கு, 'என் கணவருக்கு அலுவலகம் தான் முதல் மனைவி' என்கிற வருத்தம்; குழந்தைக்கு, தன் அப்பா மட்டும் வரவில்லையே என்கிற ஏக்கம். இப்படி ஒவ்வொரு சம்பவமாகச் சேர்ந்து போகும்பொழுது, பிரச்னைகள் கூடத்தானே செய்யும்? இந்த நண்பர் தனது தொழிலில் வரக் கூடிய அவசர நிலைகளை அறிந்தும், பள்ளி விழாவுக்கு வருவதாகக் குழந்தையிடம் உறுதியாகச் சொல்லியிருக்க வேண்டாம். போக முடியாத நிலை வந்தால் ஈடுகட்ட, மற்றொரு விடுமுறை நாளில் குழந்தைக்கு ஸ்பெஷலாக ஒரு அவுட்டிங் கூட்டிப் போவதாகச் சொல்லலாம். குடும்பத்துக்காக உழைக்க வேண்டியது தான். ஆனால் குடும்பத்துக்கும் நேரம் ஒதுக்கினால் குறைப்பட்டுக் கொள்ள மாட்டார்களல்லவா?

> "நீ திருடலைன்னு என் முகத்தைப் பார்த்துச் சொல்லு"
> "அந்தக் கண்றாவியை பாக்கறத விட நான் குற்றத்தை ஒப்புக்கறேன், எசமான்"
>
> \- அஜித்லால்



இப்படி பல சூழ்நிலைகளை உதாரணமாகச் சொல்ல முடியும், நமது தினசரி வாழ்க்கையில் நாம் ஆடும் அம்மானையைப் பற்றி. மனிதமனம் எப்போதும் தன்னைச் சுற்றி ஒரு சுகமான வட்டத்தை (comfort zone) அமைத்துக் கொள்கிறது. அந்த மந்திர வட்டத்தின் சுகம் குறையும்போது, மறுபடி ஏதாவது செய்து மீண்டும் சுகத்தை அடையப் பார்க்கிறது. நமது உள் உலகத்துக்கேற்ப வெளி உலகத்தை மாற்றப் பார்க்கிறோம். அந்த முயற்சியில், சில சமயங்களில் உறவுகளில் உரசல் வரும்போது விழித்துக் கொண்டு சரி செய்து கொள்கிறோம். அப்படிச் செயல்பட்டால் பாலமாவோம்.

சில சமயங்களில் விழித்துக் கொண்டு சரி செய்யத் தவறியும் விடுகிறோம்; அல்லது சரி செய்து கொள்வதாக எண்ணிக் கொண்டு பிரச்னையை மேலும் வளர்க்கிறோம்!

*(பேசுவோம்)*

மாடல்: **ஸ்ரீதேவி, சோமசுந்தரம் தம்பதி**
படங்கள்: **ஸ்ரீஹரி**

# யார் பாக்கியசாலி?

பெரிய தடை நம் மனஸேதான். ஏதாவது காமம், கவலை, - 'இது அப்படியாகணும்', 'அது அப்படியாகணும்', 'அப்படி ஆகுமோ ஆகாதோ?', 'எப்படி ஆயிடுமோ?' என்று பல தினுஸான எண்ணங்களின் பாரத்தில் நெரிபடுவது என்று, நம் மனஸையே நம்முடைய வாழ்க்கைப் பிரயாணம் ஆனந்தப் பாதையில் போக முடியாதபடி, பெரிய தடையாக குறுக்கே போட்டுக் கொண்டிருக்கிறோம்.

விக்நேச்வரரை உபாஸித்து உபாஸித்து அவருடைய ப்ரஸாதத்தினால் அவர் மாதிரியே நாமும் குழந்தைகளாகி ஒரு காமமில்லை, கவலையில்லை, போனதையும் வருவதையும் குறித்த மனோபாரம் இல்லவே இல்லை என்றாகி, - அப்பப்போ ஒரு ஸந்தோஷமா? அதை குழந்தை மாதிரி நன்றாகச் சிரித்து அனுபவித்துக் கொண்டு- அதே மாதிரி, அப்பப்போ ஒரு துக்கம் வந்தாலும் அந்த நிமிஷம் மட்டும் அழுதுவிட்டு, ஆனால் அப்புறம் நினைத்து நினைத்து அழாமல் - இப்படி சிரிப்பு, அழுகை இரண்டும் இருந்தாலும் சிரித்து விளையாடுவதுதான் ஜாஸ்தியாக, ஒரு குழந்தை இருப்பது போலவே இருந்துவிட்டோமானால் நம்மைவிட பாக்யசாலியில்லை. முக்யமாக, 'சென்று போனது இப்படியாச்சே; வரப்போவது இப்படியிருக்கணுமே' என்று ஓயாமல் நம்மைப் பிய்த்துப் பிடுங்கும் சிந்தனைச் சுமை குழந்தைக்கு இல்லாததுதான் அதனுடைய ஆனந்தத்தின் ரஹஸ்யம். குழந்தை ஸ்வாமி கனமான யானை ரூபத்திலிருந்தாலும், இந்த விசாரச் சுமையில்லாமல் பரம இலேசாக இருப்பவர். 'நெட்டிப் பிள்ளையார்' என்று அவரை இலேசாகப் பண்ணுகிறோமல்லவா? நம்மையும் அவர் அப்படிப் பண்ண ப்ரார்த்திப்போம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்



அருள்வாக்கு

# இளம்பிறை கவிதைகள்

## காதல்

நட்சத்திரங்கள்
உதிர்ந்து கிடக்கும்
இரவுநதி.
அறுக்கவும் - கட்டவும் முடியாத
நினைவு விளைச்சல்.
மழையில் பற்றும் தீ.
ஆன்மாவில் பதிந்து கிடக்கும்
ரத்தினக்கற்கள்.
பெருங்கூட்டத்தின் தனிமை.

## மாற்றம்

நீடிக்க முடியாத
நிலைகளில் மாறும்
புதிய விருப்பங்களுக்கு
மாறாத- மறவாத
காதல் சத்தியங்கள்.

## தொலைதல்

எல்லாவற்றையும்
தொலைத்து... தொலைத்து...
தடுமாறும் காதல்
தன்னைத் தொலைக்க முடியாத
தவிப்புகளுடன்.

## நம்பிக்கை

பிரியாதிருக்க
உத்திரவாதம் உண்டெனில்
'உன் செருப்பாகவும் மாறத்
தயார்' என
பேசிக் கொள்ளும் காதல்
பின்பு,
மிதித்து நசுக்கிவிட்டும் போகும்!

## பிரிவு

குருதி கசியப் பிறாண்டி
நடுநிசியிலிருந்து
குதித்தோடுகிற...
கறுத்த... கொழுத்த பூனை
உறக்கம்.
காயங்களின் எரிச்சலுடன்
புலம்பித் தேம்பிக் கொண்டிருக்கிறது
காரிருள்.
இன்றும்
நினைக்க மறந்து விட்டாய் நீ!

## ஏக்கம்

தொடர்பு எல்லைக்கு
அப்பால் நின்று
அழைக்க நினைக்கும்
வாய்ப்பற்ற நெருக்கடியில்
கசியும் நேசம்,
அலைந்து... திரிந்து
அலுத்துப் படுத்துக் கொள்கின்றன
முன்பு எரிந்தடங்கிய அடுப்புகளில்
பசியுடன்.

ஓவியம்: அனந்தபத்மநாபன்



# காவிரியில்

காவிரிக்கு துலா காவிரி என்றொரு பெயருண்டு. இந்திய தேசத்தின் ஜீவ நதிகள் பன்னிரண்டு. அவை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு ராசி. கங்கைக்கு மேஷம். நர்மதைக்கு ரிஷபம். சரஸ்வதிக்கு மிதுனம். யமுனைக்குக் கடகம். கோதாவரிக்கு சிம்மம். கிருஷ்ணாவுக்கு கன்னி. தாமிர பரணிக்கு விருச்சிகம். சிந்துவுக்கு தனுசு. துங்கபத்ராவுக்கு மகரம். பீமரதிக்கு கும்பம். தப்திக்கு மீனம். காவிரிக்குத் துலாம்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை புஷ்கரம் வந்தமைகிறது. பிரகஸ்பதியான குரு பகவான் ஒரு குறிப்பிட்ட ராசியில் வந்து சஞ்சரிக்கும்போது, அந்த ராசிக்கு உரிய நதிக்கு புஷ்கர விழா நடைபெறுகிறது. புஷ்கரம் என்றால் 'செழுமை பொருந்திய' என்று பொருள். தற்பொழுது குரு பகவான் துலா ராசியில் சஞ்சரிப்பதால் காவிரிக்கு புஷ்கரவிழா கொண்டாடப் பட்டுள்ளது.

ஆந்திர மாநிலத்தின் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ திரிதண்டி ஸ்ரீமன் நாராயண ராமானுஜ சின்ன ஜீயர் ஸ்வாமிகளின் மங்களா சாஸனத்தின்படி காவிரியில் புஷ்கர விழா நிறைவேற்றப்பட்டுள்ளது. புஷ்கரம் நிறைவேற்றப்படும் பன்னிரண்டு நாட்களிலும் பெருமளவு பக்தர்கள் காவிரியில் புனித நீராடி வருவதால், அதனைக் கும்பமேளா என்றும் சிறப்பித்துக் கூறுகின்றனர்.

உலக நன்மைக்காக நதிக்கரையில் பல்வேறு சிறப்பு யாகங்கள் நடத்தி, அந்த யாகத்தில் வைக்கப்படும் புனித நீரை அந்த நதியில் சேர்த்து, அந்த நீரில் புனித நீராடும் வழக்கம் தொன்று தொட்டு இருந்து வருகிறது. காவிரியை அடுத்து அமைக்கப்பட்டிருந்த பிரத்தியேக யாக சாலையில் பன்னிரண்டு நாட்களும் யாக வேள்விகள் நடந்தேறின. முதல் நாள் வேள்விகள் வேத கால முறைப்படி துவங்கின. யாக சாலை பூஜை துவங்குவதற்கான அக்னியை (தீயினை), வேதகால முறைப்படி அரணிக்கட்டை எனப்படும் மூலிகைக் கட்டையைக் கடைந்து

# கும்பமேளா!



அதில் ஏற்படும் வெப்பம் மற்றும் தீப்பொறி ஆகியவற்றினால் பெறப்பட்டது. பின்னர் அந்தத் தீயானது யாக குண்டங்களில் சேர்ப்பிக்கப்பட்டு யாகம் துவங்கியது. முதலில் சுதர்சன ஹோமமும் அதனைத் தொடர்ந்து இஷ்டி ஹோமமும் நடைபெற்றது.

பஞ்ச பூதங்களைக் குறிப்பிடும் வகையில் ஐந்து ஹோம குண்டங்கள். அதன் நடுவே ஆந்திர மாநிலத்திலிருந்து (திரிசண்டி) தருவிக்கப்பட்டிருந்த ஸ்ரீனிவாஸப் பெருமாள், பத்மாவதி தாயார், சக்கரத்தாழ்வார் ஆகிய உற்சவ மூர்த்திகள் அலங்கரிக்கப்பட்டு மேடையில் வீற்றிருந்தனர். பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் யாகசாலை பூஜையில் கலந்து கொண்டு காவிரியில் புனித நீராட, புஷ்கர விழா இனிதே நடைபெற்றது.



கட்டுரை, படங்கள் :

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



உளவியல் தொடர்கதை



# விலங்குகள்

தன் கூண்டின் பக்கமாக வந்த ராஜனைப் பார்த்து புலி ஒலி எழுப்பியது. அதன் பொருள் 'நன்றி' என்பதாக இருக்கக்கூடும். அல்லது 'ஏன் டாக்டர் வருத்தமாக இருக் கிங்க?' என்பதாகவும் இருந் திருக்கலாம்.

"குட் மார்னிங் டைகர் சார்" என்றபடி அதன் இடக்காலை கவனித்தான் ராஜன். காயம்பட்டிருந்த இடம் நன்கு ஆறிவிட் டிருந்தது. தொடர்ந்து சில நாட்களுக்கு அவன் அளித்த 'இன்ஃப்ரா ரெட் கதிர்வீச்சு' சிகிச்சைக்கு அந்தப்புலி வாகாகத் தன் காலைக்காட்டி அளித்த ஒத் துழைப்பு ராஜனுக்கே சிறிது வியப்பை அளித்திருந்தது.

பொழியலூர் ஆலய யானையின் உடல்நிலை குறித்துக் கவலையாக இருந்தது. நெருங்கிப் பழகிய பாகனையே அருகில் சேர்க்காத அந்த யானை, ராஜனை அருகில் அனுமதிக்காததில் வியப் பில்லை. தொலைவிலிருந்தே மயக்க மருந்து ஊசியை அம்புபோல் அதன் உடலில் எறிந்து, அது மயங்கிக் கீழே சரிந்த பிறகுதான் அதன் அருகில் செல்ல முடிந் தது. அதன் காதுச் சிரையிலிருந்து ரத்தத் தைச் சேகரித்து வந்திருந் தான். சோதிக்க வேண்டும்.

**10**

அந்த ஈ தன்பாட்டுக்குப் பறந்து போயிருக்கலாம். ஆனால் பலவானிடம் நட்பு பாராட்டினால், வருங்காலத்தில் பல நன்மைகளைப் பெறலாம் என்ற எண்ணம் தோன்றியது அதற்கு.

அங்கு நடந்து கொண்டிருந்த யானை யின் பின்னால் பறந்தபடி "அனைவரும் கேட்டுக் கொள்ளுங்கள். இந்த யானையின் வலிமை யாருக்கும் கிடையாது. இந்த யானையின், தந்தத்தின் மதிப்பே அலாதி" என்று அறிவித்தது.

யானைக்குப் பெருமையாகத்தான் இருந்தது. "துதிக்கை... துதிக்கை" என்று அடியெடுத்துக் கொடுத்தது.

"இந்த யானையின் துதிக்கை தனிச் சிறப்பு மிக்கது. வேறெந்த மிருகத்துக்கும் இல்லாத உறுப்பு இது" என்றது ஈ.

அப்போது 'இயற்கையின் அழைப்பு' உந்த, யானை தன் பின் னால் வந்து கொண்டிருந்த ஈயை எச்சரிக் கும் விதமாக "சாணம், சாணம்" என்றது.

புரிந்து கொள்ளாத ஈ "இந்த யானை யின் சாணம் மிகச் சிறந்த கிருமிநாசினி" என்றது. அப்படிக் கூறி முடித்தபோது, பெருமளவில் கீழே பாய்ந்த யானையின் சாணம் ஈயின்மீது விசையுடன் விழ, அந்த ஈ இறந்தது.

வண்டியில் ஏறும்போது ஒரு சின்னப் பையன் கேட்ட கேள்வி நினைவுக்கு வந்தது. "காலிலே இருந்து ரத்தத்தை எடுத்திருக்கலாமே டாக்டர்?". "பாதியிலே முழிச்சிக்கிட்டு என்னை மிதித்து விட்டால்..." என்று புன்னகையுடன் விளக்கினான் ராஜன்.

இன்று உயிரியல் பூங்காவுக்குள் நுழைந்தபோதே கெட்ட செய்தி ஒன்று காத்திருந்தது. கண்ணாடிக் கூண்டினுள் இருந்த சிறு பறவைகள் இரண்டு இறந்திருந்தன.

"கோவிந்தசாமி, என்ன ஆச்சு? ஏதாவது வல்லூறு வந்ததா?"

கோவிந்தசாமிக்கும் விளங்கவில்லை. "அப்படித்தான் இருக்கணும் டாக்டர்" என்றான்.

வல்லூறு போன்ற பெரிய பறவைகள் கண்ணாடிக் கூண்டை வேகமாகக் கொத்தினால், அந்த அதிர்ச்சியிலேயே மிகவும் சிறிய பறவைகள் இறந்து விடுவதுண்டு. அவ்வளவு ஏன், மானைக் கூட சற்றே பலவந்தமாக அழைத்து வந்து சிகிச்சை அளித்தால், அந்த பயத்திலேயே அதன் இதயம் நின்றுவிடலாம்.

'வல்லூறாகத்தான் இருக்க வேண்டும்'. அந்தச் சிறுபறவையின் கண்களில் பயம் புலப்பட்டது ராஜனுக்குத் தெரிந்தது.

அனுஷாவிடமும் அவன் இதே போன்றதொரு பயத்தைப் பார்த்திருக்கிறான். தொடர்ந்து தன் தீண்டலை அவள் தவிர்த்து வர, ஒரு நாள் நள்ளிரவில் அவள் தூங்கும்போதாவது அவளைத் தொட வேண்டும் என்ற உந்துதல் ஏற்பட்டது.



இலேசாகத் தொடவே திட்டமிட்டிருந்தாலும், உணர்வுகளின் உந்துதல்களால் அது அழுத்தமான ஆலிங்கனமாக மாறிவிட, சட்டென உலுக்கப்பட்டவளாய் கண் விழித்தாள் அனுஷா. ஒரு கணம் அவள் இதை விரும்பி நெகிழ்ந்தது போலத்தான் இருந்தது. ஆனால் அடுத்த கணமே, அவள் கண்களில் புலப்பட்ட அருவருப்பு கலந்த பயம் அவனைத் திகைக்க வைத்தது.

அந்த நிலையில் அவள் அவனைத் தள்ளிவிட முயற்சித்திருந்தால், ஒருவேளை அவன் அதற்கு இடம் கொடுக்காமல் போயிருக்கலாம். ஆனால் தன் உடலை இறுகக் குறுக்கிக் கொண்டு அவள் வீசிய அச்சப் பார்வையில் அவன் பெரும் பாதிப்படைந்தான். சட்டென விலகினான். இதுபோன்ற சூழல் அமைந்ததை எண்ணி உறக்கம் வராமல் தன்னிரக்கத்தில் தகித்தான்.

என்றாலும் அனுஷாவை அவனால் வெறுக்க முடியவில்லை. அவளது பிற நல்ல குணங்கள் அவனைக் கட்டிப் போட்டன. தானாக ஒருநாள் மனநல ஆலோசகரைச் சந்திக்க அவள் ஒப்புக் கொள்வாள் என்ற நம்பிக்கையில் நாட்களைக் கடத்தினான்.

"இது என்னங்க? சேலையோட பில்லுல அறை வாடகை முன்னூறு ரூபான்னு தனியா போட்டிருக்கீங்க?"

"'ஆடி மாச'த் தள்ளுபடி சீஸன்ல எங்க கடைக்குள் நுழைஞ்ச நீங்க இந்தத் தீபாவளி முடிஞ்சும் இங்கேயே தங்கியிருந்தீங்களே மேடம்!"

- கிரிஜா மணாளன்



சட்டென்று அந்த யோசனை தோன்றியது. ஆனந்தை மதியம் இங்கே வரமுடியுமா என்று கேட்டால் என்ன? அவனோடு பேசினால் மனத்தில் உற்சாகம் திரும்பும். உயிரியல் பூங்காவின் அருகிலேயே ஆனந்தின் அலுவலகம் இருந்தது. இந்த விதத்தில் வசதியாகத்தான் இருந்தது.

செல்போனில் எண்களை ஒற்றினான். மறுமுனையில் ஆனந்தின் குரல் கேட்க, "ஆனந்த், முடிஞ்சா மதியம் நாம ரெண்டு பேரும் வெளியே போய் சாப்பிடலாமா?"

தொடர்ந்து மௌனம். ராஜனுக்கு வியப்பை ஏற்படுத்தியது. கட்டாயம் வருவதாகவோ அல்லது வேலைச்சுமை காரணமாக வரமுடியாது என்பதையோ உடனடியாக வெளிப்படுத்தக் கூடியவன் அவன். இன்று ஏன் இந்த மௌனம்?

சட்டென இரு நாட்களுக்கு முன் அனுஷா கூறியது நினைவுக்கு வந்தது.

"ஆனந்துக்கு ஏதாவது பிரச்னையா?"

"எனக்குத் தெரிந்து இல்லை. ஏன், எதற்காகக் கேட்கிறே?" என்று பதிலுக்குக் கேட்டான் ராஜன்.

"இல்ல. ரெண்டு மூணு நாளாவே ஆனந்த் நம்ம போர்ஷனுக்கு வருவதில்லை. உடம்பு சரியில்லையோன்னு நினைச்சு நேத்து சாயந்திரம் மேலே போயிருந்தேன். பாத்ரூமுக்குள்ளே பூந்துகிட்டு 'நான் வர இன்னும் அரைமணி நேரம் ஆகும்'னு சொன்னான். நான் வந்துட்டேன்"

"இதிலே கவலைப்பட என்ன இருக்கு?"

"இல்லீங்க. நான் நுழைவதைப் பார்த்தவுடன் அவன் அவசர அவசரமாக பாத்ரூமுக்குள்ளே போனான். தவிர உள்ளே போனபோது அவன் என்னைப் பார்த்த பார்வையில் ஏதோ வெறுப்பு தெரிஞ்ச மாதிரி இருந்தது"

வியப்பாக இருந்தது. ஆனந்திடம் இது குறித்து நேரடியாகவே கேட்டுவிடத்தான் வேண்டும் எனத் தீர்மானித்தான்.

மறுமுனையில் ஆனந்த் தொடர்ந்து மௌனத்தை வெளிப்படுத்த "நீ கட்டாயம் வரணும் ஆனந்த்" என்றபடி தொடர்பைத் துண்டித்தான் ராஜன்.

உள்ளே நுழையும்போதே ஆனந்

தின் நடையில் ஒரு சோர்வு தெரிந்தது.

"டேய் ஆனந்த். மனசிலே எதை வெச்சிக்கிட்டு இப்படித் தடுமாற்றம்?"

தன் முகத்தைப் பார்க்காமல் வேறு திசையை ஆனந்த் பார்க்க, ராஜனுக்கு தன் யூகம் சரிதான் என்று பட்டது. ஏதாவது அதிர்ச்சிகரமான கேள்வியை வீசியாவது இவன் மனத்தில் இருப்பதை வெளிக் கொண்டு வர வேண்டும்.

மூன்று நாட்களுக்கு முன் தன்னைத் தாக்கிய அதிர்ச்சி சம்பவம், மீண்டும் ஆனந்தின் மனத்தில் சக்கர வட்டமடித்தது.

தன் அறையில் உட்கார்ந்து கொண்டு வீட்டுக்கு எடுத்து வந்திருந்த அலுவலக வேலையைச் செய்து கொண்டிருந்தபோது, எதிர்பாராது வேகமாக வீசிய காற்றில் ஒரு தாள் ஜன்னல் வழியே கீழே விழுந்தது. 'அடடா முக்கியமான பேப்பராயிற்றே'. இரண்டு படிகளுக்கு ஒன்றாகக் கீழே இறங்கிய ஆனந்த், தன் ஜன்னலுக்கு நேர்கீழே விழுந்திருந்த அந்தக் காகிதத்தை எடுத்தான். அதனருகிலேயே நன்கு சுருட்டி வீசப்பட்டிருந்த மற்றொரு காகிதம் அவன் கவனத்தைக் கவர்ந்தது. எடுத்துப் பிரித்தான்.

அதில் முத்தான கையெழுத்தில் "கோகுல், ஐ லவ் யூ" என்று எழுதப்பட்டிருந்தது. இலேசான நீரில் அந்த வார்த்தைகள் அழிந்து காணப்பட்டன. கண்ணீர்?

சந்தேகம் இல்லாமல் அது அனுஷா அக்காவின் கையெழுத்துதான். அவள் எழுதிய மளிகைப் பட்டியலை அவன் பலமுறை கடையில் சேர்த்திருக்கிறானே.

ஏதோ அவள் விளையாட்டாக எழுதி இருக்க வேண்டும். இதையே சாக்காக வைத்துக்கொண்டு அனுஷாவைக் கிண்டல் செய்ய எண்ணி உள்ளே நுழைந்தான். அறைக்குள் அனுஷா தூங்கிக் கொண்டிருந்தாள்.

அவளை உடனடியாக எழுப்பத் தீர்மானித்தான். 'இப்படியா கதவைத் திறந்து போட்டுட்டு தூங்குவது? இந்த ஆனந்த் மட்டும் இல்லேன்னா உங்க வீட்டுக் கட்டிலைக்கூட இன்னேரம் திருடன் தூக்கிட்டுப் போயிருப்பான்' என்று போலியாக அலுத்துக் கொள்ள வேண்டும். அறைக்குள் நுழைந்த அடுத்த கணம் அவன் கால்கள் ஆணியடித்ததுபோல்

"வெடி ஐட்டமெல்லாம் தீர்ந்து போச்சு. வேணும்னா டெட்டனேட்டர், ஜெலட்டின் குச்சியெல்லாம் வாங்கிட்டுப் போய் நீங்களே பண்ணிக் கறீங்களா?"

- இடைப்பாடி ஜெ.மாணிக்கவாசகம்



நின்றன.

அனுஷா இலேசாகப் புரண்டு படுத்தாள். "கோகுல், நான் உன்னைக் கல்யாணம் செய்துகிட்டு இருக்கக்கூடாதா? அப்போ வாழ்க்கை எவ்வளவு இனிமையா இருந்திருக்கும்?" என்று உறக்கத்திலேயே அவள் மெல்ல முனகுவது கேட்டது.

வேகமாக அங்கிருந்து வெளியேறிய ஆனந்தால் அன்றிலிருந்து அனுஷாவுடனோ, ராஜனுடனோ மனம் விட்டுப் பேச முடியவில்லை. அனுஷாவைப் பற்றிய அவன் பிம்பம் சிதைந்து போனது.

இதையெல்லாம் ராஜன் அண்ணாவிடம் எப்படிப் பகிர்ந்து கொள்வது? அதனால்தான் இருவரையுமே தவிர்க்கத் தொடங்கினான்.

ஆனால் "ஆனந்த், உன் மனசிலே எது இருந்தாலும் அதை என்கிட்டே நீ சொல்லித்தான் ஆகணும்" என்று தன் கண்களை நேருக்கு நேராகப் பார்த்தபடி ராஜன் உத்தரவிட, மனோவசியப்பட்டவன் போல் தான் கண்ட காட்சியை கூறத் தொடங்கினான் ஆனந்த்.

(தொடரும்)



# க்ளிக்கி... க்ளிக்கி...

### க்ளிக் :

எங்கெங்கு காணினும் கேமரா... செல்போனில், கட்டடங்களில், ஏன் பாத்ரூமில் கூட கேமராவோடு வாழ்ந்து கொண்டிருக்கிறோம். உலகின் முதல் 'க்ளிக்' எப்போது எடுக்கப்பட்டிருக்கும்? முதன் முதலில் 'க்ளிக்'கியவர் யார்? அந்தக் கருவி எப்படி இருந்திருக்கும்? - அறிய ஆவலாக இருக்கிறதா.. www.rleggat.com/photohistory/ க்குப் போங்க. இப்போதுள்ள கேமராக்களின் கிராண்ட் ஃபாதர்களெல்லாம் எப்படிப் பிறந்தார்கள் என்ற வரலாற்றையே தெரிந்து கொள்ளலாம். ஏ டு இசட், உலகின் புகைப்படக் கலை வல்லுநர்கள் பற்றிய தகவல்கள், அவர்கள் எடுத்த சில புகைப்படங்கள் என கலைகூட்டுகிறது தளம். மௌஸைக் க்ளிக்கி, க்ளிக்கி 'க்ளிக்'குகளின் ஹிஸ்டரியை அறிய உதவுகிறது இத்தளம்.

### டௌன்லோட்:

ஆப்பிள் நிறுவனம் கொண்டு வந்துள்ள புதிய வீடியோ ப்ளேயர், குயிக் டைம் (Quick Time). அடுத்த தலைமுறைக்கான வீடியோ ப்ளேயர் இதுதான் என்கிறது ஆப்பிள். 'ரியல் ப்ளேயர், விண்டோஸ் மீடியா ப்ளேயரை விடச் சிறந்தது எங்கள் வீடியோ ப்ளேயர்தான்! 3 gpp (mms), mp3, flash, aiff, aac போன்ற பைல்கள் இதில் இயங்கும். இதில் பிக்சர் வியூவரும் இருப்பதால் gif, tiff, psd போன்றவற்றின் பைல்களையும் காண முடியும் என்கிறார்கள். இந்த ப்ளேயர் இலவசமாகக் கிடைக்கிறது. முகவரி : http://www.apple.com/quicktime/download/win.html.

## அட!



### வலைப்பதிவு :

இலங்கையில் தமிழ்த் தேசியத்தை ஆதரிக்கும் ஊடகவியலாளர்களைப் பலி கொள்வதில் இந்திய உளவுத் துறை அமைப்பான ரா, ஈடுபட்டிருப்பதாக ஒரு கட்டுரையை வாசித்தேன். தமிழர்களின் அடிப்படை உரிமைகளுக்கெதிரான சதிகளை வெளிப்படுத்தும் தராக்கி சிவராம் போன்ற ஊடகவியலாளர்களைத் தீர்த்துக் கட்டுவதில் 'ரா'வுக்குப் பங்குண்டு என்கிறார் கட்டுரையாளர். புலிகளுக்கு எதிரான வேலைகளை மட்டுமின்றி, வேறு குழுக்களுக்கிடையேயும் (உதாரணமாகக் கருணாவுக்கும் ஈ.பி.டி.பிக்கும் இடையே) பிரிவினையை ஏற்படுத்துவதன் மூலம் தமிழர்களின் போராட்டத்தினை வலுவிழக்கச் செய்வதை 'ரா'வின், செயற்பாடுகளில் ஒன்றாகக் கட்டுரை சுட்டிக் காட்டுகிறது. மக்களாட்சி, கருத்துச் சுதந்தரம், பேச்சுரிமை, எழுத்துரிமை எல்லாம், தான் வரையும் கோடுகளுக்குள்தான் இருக்க வேண்டும் என்று நினைப்பதுவும் ஒரு சர்வாதிகாரப் போக்கே. எட்டு முதல் பத்தாயிரம் பணியாளர்களைக் கொண்டு வருடமொன்றுக்கு 1500 கோடி ரூபாய்களைச் ($145 மில்லியன்கள்) செலவிட்டு, நம் அரசாங்கம் செய்வது இந்தக் குரல்வளை நெறிப்புகளைத்தானா? (bhaarathi.net/sundara/ - வலைப்பதிவிலிருந்து)

- வலைஞன்

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்:** திடீர் அதிர்ஷ்டங்கள் ஏற்படும் வாரம். குடும்பத்தில் சுபகாரியம் ஏற்படும். கல்வி மேன்மை பெறும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். மாணவ - மாணவிகளுக்கு எதிர்பார்க்கும் காரியம் வெற்றி பெறும். சிலருக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்பு ஏற்படும். வியாபாரிகளுக்கு தொழிலில் ஏற்றம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். புதிய தொழில் தொடங்க நல்ல காலம். உத்தியோகஸ்தர்களுக்கு வேலை மாற்றம் வரலாம். திருமணம் கை கூடும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வருதல் நல்லது.

**ரிஷபம்:** வளர்ச்சி தரும் வாரம். எதிர்ப்புகள் குறையும். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல வருவாய் அமையும். சிலருக்கு அயல்நாடு செல்லும் வாய்ப்பு ஏற்படும். வியாபாரிகளுக்கு நல்ல முன்னேற்றம் கிட்டும். திருமணம் தடை விலகி சுபகாரியம் நடக்கும். மாணவ / மாணவிகளுக்கு நற்பலன் மிகுந்த வாரம். ராகு / கேது / குரு வழிபாடு உத்தமம்.

**மிதுனம்:** வெற்றியை அளிக்கும் வாரம். திருமண காரியம் கைகூடும். குழந்தைப் பேறு ஏற்படும். உத்தியோகஸ்தர்களுக்கு உயர்வு கிடைக்கும். குழந்தைகள் வழியில் நல்ல திருப்பங்கள் கிட்டும். நண்பர்கள் உறவினர்களால் நன்மை ஏற்படும். கல்வியில் முன்னேற்றம் கிட்டும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வழக்கு வெற்றி பெறும். ராகு / கேது வழிபடுதல் நலம்.

**கடகம்:** சிறப்பான வாரம். எதிர்பாராத தனம் கிடைக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு பணி மாற்றம் ஏறபடும். திருமணம் கை கூடும். வியாபாரிகளுக்கு தொழிலில் நல்ல மாறுதல் ஏற்படும். சிலருக்கு வெளிநாடு சென்று வர வாய்ப்பு கிட்டும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். கலைஞர்கள் ஏற்றம் காண்பார்கள். குரு / சனி வழிபடுதல் நலம்.

**சிம்மம்:** நன்மை தீமை கலந்த வாரம்.



**தஞ்சை பரத்வாஜ்**

**2.11.2005 முதல் 8.11.2005 வரை**



# பரத்வாஜ் பதில்கள்

**எனது கையெழுத்தை நான் இரண்டு விதமாகப் போடுகிறேன். எதைப் பின் பற்ற வேண்டும்?**

**- த. ஞானசெல்வன், பிரியம்மாள்புரம்**

தங்கள் பெயரை T. Ganaselvan என்று கையெழுத்துப் போடவும்.

**எனது மகன்களின் ஜாதகப்படி வெளிநாட்டில் வேலை கிடைக்குமா? திருமணம், ஆயுள் பலம் பற்றிக் கூறவும்?**

**- எம். ராஜாமணி, நங்கநல்லூர்**

செல்வன் மீனாட்சிசுந்தரம் ஜாதகப்படி தற்பொழுது சுக்ரதசை நடைபெறுகிறது. உங்கள் பையனுக்கு 2006-ல் வெளிநாட்டில் வேலை கிடைக்கும். 29 வயதில் திருமணம் நடக்கும். தீர்க்காயுள் உண்டு.

செல்வன் பால சுப்ரமணியன் ஜாதகப்படி, ஆயுள்பலம் தீர்க்கம். புதன் தசை நடக்கிறது. நிரந்தர வெளிநாட்டு வேலை வாய்ப்பு உள்ளது.

**என் மகனுக்கு எப்பொழுது திருமணம் நடக்கும்?**

**- ஆர். சரோஜா, சென்னை**

தற்பொழுது குருதசை நடைபெற்று வருகிறது. 2006-ல் திருமணம் முடியும். உடன்பிறப்பு இருவர் உள்ள இடத்தில் பெண் அமையும். அவசரத் திருமணம் நடக்கும்.

**அலுவலக பிரச்னைகள் எப்போது தீரும்? உத்தியோக உயர்வு அமையுமா?**

**- வி.பிரேமகுமாரி, மும்பை**

உங்கள் ஜாதகப்படி மரகதம் - பச்சைக் கல் அணிய வேண்டும். 15.11.2005 வரை

வாக்கில் நிதானம் அவசியம். வாகனத்தில் செல்லும் போது உஷார். உத்தியோகஸ்தர்களுக்கு வேலைப் பளு அதிகரிக்கும். திருமணம் கை கூடும். ஆரோக்கியத்தில் கவனம் தேவை. வியாபாரிகள் ஓரளவு நற்பலன் அடைவார்கள். செலவு அதிகம் ஏற்படும். மாணவ, மாணவியர்கள் படிப்பில் கவனம் தேவை. ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்து வருவது நலம் தரும்.

**கன்னி**: மேன்மையான வாரம். வீடு வாங்க நல்ல நேரம். புதிய முதலீடுகள் செய்ய உத்தமம். திருமணம் கைகூடும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். சுபசெலவுகள் வரும். உத்தியோகஸ்தர்களுக்கு ஊதிய உயர்வு காத்திருக்கிறது. ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வியாபாரிகளுக்கு தொழில் சுறுசுறுப்புடன் நடைபெறும். பணப் பற்றாக்குறை விலகும். மாணவ மாணவியர்கள் நல்ல பலன் பெறுவார்கள். ராகு / கேது வழிபடுதல் நலம்.

**துலாம்**: சிறப்பான வாரம். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். மாணவ, மாணவியர்கள் நல்ல மதிப்பெண்கள் பெறுவார்கள். தடை விலகி திருமணம் கை கூடும். தொழிலில் இருந்த வந்த மந்த நிலை மாறி, சுறுசுறுப்புடன் நடக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு வேலையில் நல்ல முன்னேற்றம், புதிய வேலை கிடைக்கும். சனி / குரு வழிபட்டு வருதல் நலம்தரும்.

**விருச்சிகம்**: சுபசெய்திகள் தரும் வாரம். நண்பர், உறவினர்களின் அனுகூலம் கிட்டும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தைகள் வழியில் சுப செலவுகள் வரும். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல பலன் அளிக்கும். புதிய தொழில் முயற்சி பலன் தரும். மாணவ, மாணவிகள் அதிக மதிப்பெண்கள் பெறுவார்கள். ராகு / கேது








அலுவலகத்தில் பிரச்னைகள் இருக்கும். 2006-ல் உத்தியோக உயர்வு கிடைக்கும். ஞாயிறுதோறும் சூரிய வழிபாடு செய்து வரவும்.

**எனது மூத்த சகோதரியின் கணவருக்கு உள்ள பார்க்கின்சன் வியாதி எப்போது குணமாகும்?**

**- கே.வி. பவானி, மும்பை**

உங்களது சகோதரியின் கணவர் ஜாதகப்படி செவ்வாய் மஹாதசை நடக்கிறது. இது இவருக்கு ஏழாவது தசை ஆக வந்திருப்பதால், அதுவே மரணதசை ஆக உள்ளது. அவருக்கு எந்த ஒரு வைத்தியமும் குணமளிக்க இயலாது. முருகப் பெருமானுக்கு சஷ்டி விரதம் இருந்து, சஷ்டி கவசம் படித்து வாருங்கள்.

**என் பேத்திக்கு செவ்வாய் தோஷம் இருக்கிறது. எப்போது திருமணம் நடக்கும்?**

**- தங்கக் கண்ணு, முள்ளிக்குளம்**

உங்கள் பேத்திக்கு 24வயது ஆரம்பத்தில், உடன்பிறந்த ஒருவர் உள்ள இடத்தில், வெளிநாட்டு நிறுவனத்தில் வேலை செய்யும் பையன் அமைவான். உறவில் அமையாது. 2006-ல் திருமணம் நடக்கும்.

**என்னுடைய மூன்றாவது மகள் மேற்படிப்பு படித்து வருகிறாள். அவளுக்கு வேலை கிடைக்குமா? எப்பொழுது திருமணம் நடக்கும்?**

**- டாக்டர் கோவிந்தராஜுலு, அன்னூர்**

உங்கள் பெண் ஜாதகப்படி, தற்போது குருபலம் நடக்கிறது. 23 வயது அல்லது 26 வயதில் திருமணம் நடக்கும். உறவு இல்லாத இடத்தில், திருமணம் நடக்கும். நாகதோஷம் உள்ள ஜாதகம் சேர்க்கவும். வெளிநாட்டு நிறுவனத்தில் வேலை கிடைக்கும்.

/ குரு வழிபடுதல் நலம்.

**தனுசு**: வெற்றி தரும் வாரம். சுபகாரியம் கை கூடும். உத்தியோகத்தில் இருந்து வந்த சிரமங்கள் போகும். புதிய வீடு, வாகனம் வாங்க உற்ற தருணம். சிலருக்கு அயல்நாடு செல்லும் வாய்ப்பு வரும். குழந்தைகளால் நல்ல பலன் கிடைக்கும். மாணவ, மாணவிகளுக்கு நற்பலன் கிடைக்கும். வியாபாரம் நன்றாக நடக்கும். பணத் தட்டுப்பாடு விலகும். வழக்கு வெற்றிப் பாதையில் செல்லும். சனி / ராகு / கேது வழிபடுதல் நலம் தரும்.

**மகரம்** : பொன்னான வாரம். வீடு / வாகனம் வாங்க ஏற்ற நேரம். உத்தியோகஸ்தர்களுக்கு உயர்வு ஏற்படும். தடை விலகி திருமணம் கைகூடும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். மாணவ, மாணவியர்கள் கல்வியில் முன்னேற்றம் காண்பார்கள். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். குரு வழிபாடு நன்மை தரும்.

**கும்பம்**: சாதனைகள் படைக்கும் வாரம். புதிய முதலீடுகள் செய்ய நல்ல காலம். உத்தியோகம் கிடைக்கும். திருமண காரியம் கை கூடும். கணவன், மனைவி அனுசரணை தேவை. குழந்தைகள் வழியில் சுப செலவு வரும். எதிர்ப்புகள் விலகும். வழக்கு வெற்றி பெறும். பொருளாதாரம் முன்னேற்றம் ஏற்படும். வாகனத்தில் செல்லும்போது உஷார். ராகு / கேது வழி படுதல் நலம்.

**மீனம்**: அதிர்ஷ்டம் கிட்டும் வாரம். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல திருப்பம் ஏற்படும். கணவன், மனைவி உறவில் அனுசரணை தேவை. குழந்தைப் பேறு ஏற்படும். திருமண காரியம் கை கூடும். எதிர்ப்புகள் விலகும். மாணவ, மாணவியர்கள் நல்ல பெயரைப் பெறுவார்கள். பொருளாதார சிரமங்கள் வராது. ஆபரண பொருட்கள் சேரும். ராகு / கேது / குரு வழிபாடு நலம் தரும்.








# சந்தோஷம் தரும் மூன்றெழுத்து!

சென்னை நகரத்தில், கடும் கோடை சமயத்தில், வகுப்பு அறைக்குள்ளே காற்றோட்டமில்லாமல், புழுக்கத்தில் அவதிப்பட்டுக் கொண்டிருந்த மாணவர்களை, என் தந்தை வெளியில் அழைத்துக்கொண்டு வந்து நிறுத்தி, "ஆகா! இந்தக் கோடை எவ்வளவு நன்றாக இருக்கிறது!'' என்று சிலாகித்தது பற்றி போன வாரம் சொன்னேன்!

அவர் இப்படிச் சொன்னவுடன், "இவருக்கென்ன பைத்தியமா?" என்கிறாற்போல, மாணவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள்.

மாணவர்கள் எல்லாம் வெயிலை சபித்துக்கொண்டிருக்க, என் தந்தை எதற்காக வெயிலை ரசித்துப் புகழ்ந்தார்.

மாணவர்களை மறுபடி வகுப்பு அறைக்குள்ளே அழைத்துக்கொண்டு வந்து, அமரச் சொல்லிவிட்டு, அவர் விளக்கம் கொடுத்தார். "கோடை என்றால் வெயில்தான் இருக்கும்; குளிர் காலத்தில் குளிரத்தான் செய்யும். மழைக்காலம் என்றால் இடியும் மின்னலும் மழையும் இல்லாமல் எப்படி இருக்கும்?

நம்மிடையே பிரச்னை என்னவென்றால், கோடைகாலம், குளிர்ச்சியாக இருக்க வேண்டும்; குளிர்காலம் கதகதப்பாக இருக்க வேண்டும்; மழைக்காலம் என்றால் நமக்கு சௌகரியமாக வெயில் காய வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம்.

இயற்கை எப்போதும் தன் இயல்பின் படித்தானே இயங்கும், இருக்கும். அதனால் நமக்கு சில அசௌகரியங்கள் ஏற்படலாம். ஆனால், அதற்காக இயற்கையை நம் விருப்பப்படி இயங்க வேண்டும் என்று கட்டளை இட முடியுமா? அப்படிக் கட்டளை பிறப்பித்தாலும் இயற்கை தான் அதற்கெல்லாம் கட்டுப்படுமா?

இப்போது இந்த இயற்கையின் தத்துவத்தை மனிதர்களுக்குப் பொருத்திப் பாருங்கள். கணவன், மனைவி, அம்மா, அப்பா, மாமியார், மாமனார், பிள்ளைகள் இப்படி எல்லாரும் அவரவர்களுக்கு உரிய குணாதிசயங்களுடன்தான் இருப்பார்கள். நீங்கள் அவர்கள் எப்படி இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்களோ, அதுபோல அவர்களால் எப்படி இருக்க முடியும்? என்று கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.

சரி, இதற்கு என்ன செய்வது?

பருவ கால தத்துவத்தைப் போலவே குடும்ப உறவுகளையும் புரிந்து கொள்ளுங்கள். கணவர் சற்று கோபக்காரர் என்றால், 'கோபப்படுவது அவரது குணம்' என்ற உண்மையைப் புரிந்துகொண்டு அவரை அப்படியே ஏற்றுக் கொள்ளுங்கள்.

ஒவ்வொருவரையும், அவரவர்க்குரிய குணங்களுடன் ஏற்றுக் கொண்டு விட்டால், யாரைப் பற்றியும் பிரச்னை எழாது.

இந்தியா மிக அதிகமான எண்ணிக்கையில் சினிமாக்களைத் தயாரிக்கும் நாடு என்பது உங்களுக்கெல்லாம் தெரியும். தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், இந்தி என்று பல்வேறு மொழிகளிலும் இங்கு சினிமாக்கள் வெளியாகின்றன. நம்

நாட்டில் இன்றைக்கு டெலிவிஷனின் ஆக்கிரமிப்பு மிக அதிகமாக இருக்கிறது.

ஆனால் வெகு காலமாக, இங்கே மிகவும் பிரபலமாக விளங்கும் பொழுதுபோக்கு அம்சம் சினிமாதான்.

ஒவ்வொரு சினிமாவும், ஒரு கதையைச் சொல்கின்றன. ஒவ்வொரு கதையிலும் நிறைய கதாபாத்திரங்கள் வருகின்றன. ஒவ்வொரு கதாபாத்திரத்திலும், ஒவ்வொரு நடிகரோ, நடிகையோ நடிக்கிறார்கள்.

அவர்களின் நடிப்புடன் பாடல்கள், சண்டைக் காட்சிகள், பின்னணி இசை என்று மக்களைக் கவரும் வண்ணம் ஏராளமான அம்சங்களும் சினிமாவிலே இடம் பெறுகின்றன.

பலர், படம் பார்க்கிறபோது, அந்தக் கதாபாத்திரங்களுடன் எந்த அளவுக்கு ஒன்றிப் போகிறார்கள் என்றால், கதையில் கதாபாத்திரங்கள் படும் கஷ்டங்களை, தங்களுக்கு வந்த கஷ்டங்களாக நினைத்து உணர்ச்சி வசப்பட்டு, கண்ணீர் வடிக்கிற அளவுக்குப் போய் விடுகிறார்கள். பொழுதுபோக்கு அம்சங்கள் நிறைந்த படம் என்றால் அந்த சந்தோஷத்தில் தானும் சம்பந்தப்பட்டது போல சந்தோஷம் அடைகிறார்கள்.

சினிமா பார்ப்பதனால் என்ன பலன் கிடைக்கிறது? இரண்டு அல்லது இரண்டரை மணி நேரம் பொழுது போகிறது. படம் பார்த்தபின், மறுபடியும் பழைய கவலைகள்; பிரச்னைகள். ஆக, ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால், பிரச்னைகளிலிருந்து கொஞ்ச நேரம் தப்பிக்கலாம் சினிமா உபயத்தில். அவ்வளவுதான்.

நான் சினிமா வேண்டவே வேண்டாம் என்று உங்களுக்குத் தடை போட விரும்பவில்லை.

ஒரு விஷயம் சொன்னால் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும்.

பூனாவில் இருக்கும் எங்களுடைய வேதாந்தா அகடமியில், மூன்றாண்டு காலம் மாணவர்களுக்கு வேதாந்தம் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. ஏதோ, புராண, இதிகாசங்கள், உபநிஷத்துக்கள் போன்ற இதர விஷயங்கள் சம்பந்தப்பட்டது மட்டுமே அங்கு சொல்லிக் கொடுக்கப்படுவதாக நினைத்துக் கொண்டு விடாதீர்கள்.

அங்கே மாணவர்களுக்கு, சினிமாக்களாக உருவாக்கப்பட்ட ஷேக்ஸ்பியரது படைப்புகளும் திரையிட்டுக் காட்டப்படும். இதன் நோக்கம், சீரியஸான வேதாந்த விஷயங்களைப் படித்த மாணவர்கள் ஜாலியாய் ரிலாக்ஸ் செய்து கொள்ளட்டுமே என்பது இல்லை.

ஷேக்ஸ்பியரின் கற்பனையில் உருவானவை அவை என்றாலும்கூட, அவை உலக வாழ்க்கையின் பிரதிபலிப்புகள்தானே! அதனால்தான் ஷேக்ஸ்பியர், 'உலகமே ஒரு நாடக மேடை!' என்று சொல்லி இருக்கிறார்.

நீங்கள் சினிமா பார்க்கிறபோது, அது குறித்த உங்கள் பார்வை மாறுபட்டதாக இருக்க வேண்டும் என்று அறிவுறுத்த விரும்புகிறேன்.

சினிமாவில் என்ன நடக்கிறது என்று ஒருமுறை யோசித்துப் பாருங்கள்.

ஒரு கதாநாயகன். அவன் ஒரு பெண்ணைப் பார்க்கிறான். இருவருக்கும் இடையே காதல் ஏற்படுகிறது. ஆனால் இரண்டு பேரும் வாழ்க்கையில் இணைவதற்கு, இந்த சமூகத்தில் உள்ள ஏதோ ஒன்று தடையாக இருக்கிறது. கதாநாயகனும் கதாநாயகியும், அந்தத் தடையை எதிர்த்து துணிச்சலுடன் போராட்டம் நடத்துகிறார்கள்.

''என்னது... துறவிக்கும் ராட்சசிக்கும் கல்யாணமா?''

''அட... துரைசாமி மகன் 'து.ரவி'க்கும் ராமசாமி மக 'ரா.சசி'க்கும் கல்யாணம் னேன்''

- தஞ்சை தாமு



கடைசியில் அவர்கள் காதல் ஜெயிக்கிறது. சினிமா சுபமாய் முடிகிறது.

அப்படி சுபமாக கதை முடியாமல், இருவரும் பிரிகிற சோகத்துடன் சினிமா முடிந்தால் நமக்குப் பிடிக்குமா? அந்தப் படம் வெற்றிகரமாய் ஓடாது. வசூலைக் குவிக்காது.

ஆனால் நிஜவாழ்க்கையில் காதல் என்று இல்லை, எல்லா விஷயங்களும் சந்தோஷமாகவா முடிகின்றன? இல்லையே! எத்தனை விஷயங்களில் எதிர்பாராத தோல்வி ஏற்படுகிறது? ஆகவே, வேதாந்தா அகடமியில் மாணவர்களுக்கு சினிமா காட்டப்படும்போது, அதிலிருந்து வாழ்க்கையை எப்படி அணுக வேண்டும் என்று புரிந்து கொள்ள வாய்ப்பு தரப்படுகிறது.

அது மட்டுமில்லை. கதையில் ஒவ்வொரு கதாபாத்திரத்திலும் நடிப்பவர்களுக்கு, 'இது நம் நிஜ வாழ்க்கை இல்லை. நாம் ஏற்றுக்கொண்டு நடிக்கும் கதாபாத்திரம்தான் இது என்ற உண்மை மிக நன்றாகத் தெரியும்.

இந்த மெஸேஜ், நடிகர்களுக்கு மட்டுமே உரியதில்லை. இந்தப் பூமியில் உள்ள அனைத்து மனிதர்களுக்கும் உரியது. நாம் என்ன செய்தாலும், 'இந்தச் செயலை செய்யும் பணி நமக்குத் தரப்பட்டிருக்கிறது' என்ற உணர்வு நமக்குள்ளே இருந்துகொண்டே இருக்க வேண்டும்.

ஷேக்ஸ்பியர் நாடகங்கள் அனைத்திலுமே இந்தப் பாடத்தை நாம் கற்றுக் கொள்ளலாம். அதுமட்டுமில்லாமல், பொதுவான இன்னொரு மிக அற்புதமான விஷயமும் ஏறத்தாழ அனைத்து ஷேக்ஸ்பியரின் படைப்புகளிலும் நாம் காண முடியும்.

இந்த உலகில் உள்ள பணம் மிகுந்தவர்கள் தங்கள் வாழ்க்கையில் ஏராளமான வசதிகளையும் சந்தோஷங்களையும் அனுபவிக்கிறார்கள். அவர்களுக்கும் நிறைய பிரச்னை உண்டு என்றாலும்கூட அவர்களுக்கு நிறைய சந்தோஷங்களும் உண்டு என்பதை நாம் மறந்து விடக்கூடாது.

இந்த உலகில் வாழும் ஏழை, எளிய மக்களுக்குத்தான் எத்தனை விதமான பிரச்னைகள்! அதே சமயத்தில், அவர்களுக்கும் ஒருசில சந்தோஷங்கள் இருக்கவே செய்கின்றன. ஏழ்மைக்கும், மிகுந்த வசதிக்கும் இடையில் உள்ளவர்களுக்கு மட்டும் என்ன? சந்தோஷங்களும் உண்டு, பிரச்னைகளும் உண்டு.

எத்தனை பிரச்னைகள் யாருக்கு இருந்தாலும், அத்தனையையும் மீறி, அவர்கள் நன்றியுடையவர்களாக இருக்க வேண்டும். அவர்கள் தங்களுக்குக் கிடைத்திருக்கும் சந்தோஷங்கள் பற்றி யோசித்துப் பார்ப்பார்களேயானால், கண்டிப்பாக நன்றி உணர்ச்சி தானாகவே வந்துவிடும். அந்த நன்றி உணர்வு மனதிலே அமைதியை ஏற்படுத்தும். சந்தோஷம் தரும்.

நன்றி உணர்வு இல்லாது போனால், மன அமைதி பாதிக்கப்படுவது நிச்சயம். திருமணமானவர்கள், மன அமைதி இழந்தால் குடும்பம் என்ன ஆகும்?

தத்துவமேதை சாக்ரடீஸிடம் ஒருவர் "நான் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறேன்! உங்கள் ஆலோசனை என்ன?'' என்று கேட்டாராம்.

அதற்கு சாக்ரடீஸ் அளித்த பதில் சிரிக்கவும் சிந்திக்கவும் செய்ய வல்லது.

அது என்ன பதில்?

(வெற்றி தொடரும்)

'' 'கேப்டன் குக்' யார்?''

''விஜயகாந்த் வீட்டு சமையல்காரர் சார்!''

- சம்பத் குமாரி



## பாலா விஸ்வநாதன்

# ஆசை இருக்கு...

"ரமணி! அப்பாவோட மருந்து தீர்ந்து போச்சு. போய் வாங்கிட்டு வந்துடுப்பா..." மகனிடம் அம்மா வேண்டுகோள் விடுத்தாள்.

"ஏம்மா, அப்பா ரெகுலரா சாப்பிடும் மருந்துதானே? நிறைய வாங்கி வெச்சிக்க வேண்டியதுதானே? அப்பப்போ என்னை ஏம்மா தொந்தரவு செய்யறே?"

"மெதுவா பேசு, அப்பா காதிலே விழப்போவுது. தினம் சாப்பிடும் மருந்துங்கறதுக்காக கடையையே வாங்கி வைக்கவா முடியும்? மருந்து சீட்டுக்கு உள்ளேயே பணமும் வெச்சிருக்கேன்..."

ரமணி கோபமாக, செருப்பை மாட்டிக் கொண்டு ஸ்கூட்டரை உதைத்து கடைக்குப் போய் மருந்துடன் வந்தான்.

உணவு பரிமாறிக் கொண்டே அம்மா சீதாவின் அடுத்த வேண்டுகோள்...

"ரமணி, அத்தைக்கு உடம்பு சரியில்லை. சாயங்காலம் போய் எட்டிப் பார்த்துவிட்டு வாயேன். அவளுக்கும் திருப்தியாக இருக்கும்..."

"ஏன்? அப்பா போகமாட்டாரா? நீதான் போயேன். எல்லாத்துக்கும் என் கழுத்தை ஏன் அறுக்கறே?"

"நானும், அப்பாவும் போனோம். அவளுக்குப் புள்ளையா? குட்டியா? உன்னைப் பத்தி ரொம்பக் கேட்டாப்பா. அவளுக்கு உன் மேல ரொம்பப் பாசம்..."

"அத்தைக்குப் பாசம், மாமாவுக்குப் பந்தம், சித்திக்குச் சொந்தம்னு, ஒரு இருமல், தும்மல்னா கூட நான் போய் பார்க்கணும். அவங்களும் அங்கே போ, இங்கே போ, மருந்து வாங்கிக் கொடு, டாக்டர்கிட்ட கூட்டிக்கிட்டுப் போன்னு ஒரே தொல்லை"

"ஏண்டா! அத்தையைப் போய்ப் பாருன்னா, இந்தப் பேச்சு பேசறே?..." சீதாவுக்குக் கோபம் வந்தது. அப்பா முறைத்துப் பார்த்தார்.

"உண்மையைத் தானே சொல்றேன்? நம்ம உறவுக்காரங்க தொந்தரவு பத்தாதுன்னு அக்கம் பக்கம் வேற.. எதிர்வீட்டு தாத்தா, ஒரு கண்ணுலே கறுப்புப் பட்டை ஒண்ணைப் போட்டுகிட்டு கடல் கொள்ளைக்காரன் மாதிரி பயங்கரமா, என்னை நிறுத்தி 'காலேஜுக்குப் போற வழியிலே, என்னை கண் டாக்டர் வீட்டிலே விட்டுட்டுப் போயிடு'ன்னு, பில்லியன்லே ஏறி உட்கார்ந்துட்டார். போதுமா?"

சீதா சிரிப்பை அடக்கிக் கொண்டு "இந்த மாதிரி உதவி செஞ்சா.. நல்லது தானேடா... அதுவும் வயசானவர்..."

சீறினான் ரமணி "சொல்லமாட்டே? கண் டாக்டர்கிட்ட போறதுக்கு முன்னாடி.. அவரோட உறவுலே ஒரு பெண்ணுக்கு டெலிவரி ஆச்சாம். பார்த்துவிட்டு

நொடியிலே வந்துடுறேன்னு ஒரு நர்சிங் ஹோமில இறங்கிவிட்டு 'போயிடாதே. வெயிட் பண்ணு'ன்னு சொல்லி வேலையை முடிச்சுக்கிட்டு வந்தார். அவரு வர்றவரைக்கும் ஆட்டோக் காரன் மாதிரி நான் வெயிட் பண் ணின வயிற்றெரிச்சல் உனக்குப் புரி யாது.." என்று புலம்பிய ரமணியைக் குறுக்கிட்டாள் சிதா.

"அதே தாத்தாவுக்கு கண் ஆப ரேஷன் முடிஞ்ச ஆஸ்பத்திரி



யில் இருக்கார், கூட்டிட்டுப் போறியா? பார்த் துட்டு வரலாம்..."

"அம்மா! விளை யாடாதே! மருந்து வாங்கறது, யாருக்காவது

உடம்பு சரியில்லேன்னா பார்த்து விசாரிச்கட்டு வர்றது. டாக்டரிடம் கூட்டிக்கிட்டுப் போறது- இதுதானா வாழ்க்கை? ரொம்பப் போரடிச்சுப் போச்சு. இதனாலே எனக்கு 'டிப்ரஷன்' தான் வருது. ஹாஸ்பிடல், வியாதி, மருந்து, மாத்திரை வாசனைன்னாலே அலர்ஜியாயிடுது எனக்குனு ஒரு ப்ளான் இருக்கு. பரீட்சை முடிஞ்சுருக்கு. நல்ல கட் ஆஃப் கிடைக்கணும். நிறையப் படிக்கணும். இதையெல்லாம் விட்டுட்டு, எப்பப்பாரு உன்கூட ரோதனை" என்று கத்தியபடி வெளியே கிளம்பினான் ரமணி.

அன்று, வழக்கமான பரபரப்பு இல்லாமல், சோகமாக உள்ளே நுழைந்த ரமணி செருப்பை இங்கொன்றும் அங்கொன்றுமாக உதறிவிட்டு சோபாவில் தொப்பென்று சாய்ந்தான்.

"ரமணி! என்னடா ஆச்சு? டென்ஷனா இருக்கே. காபி கொண்டு வரட்டுமா?" என்று கனிவோடு கேட்டாள் சீதா.

ரமணி அவளைத் திரும்பிப் பார்த்த பார்வை அவ்வளவு சரியாக இல்லை.

"என்னடா? தலைவலியா? மாத்திரை தரட்டுமா?"

ரமணியின் கோபம் தலைக்கு ஏறியது. "எப்போ பார்த்தாலும் உன் வாயிலிருந்து மருந்து, வியாதி இந்தப் பேச்சு தானா? என்னை டார்ச்சர் பண்ணாதேயேன்..."

இப்போது அம்மா டென்ஷனானாள். "என்னன்னு வாயைத் திறந்து, சொல்லித் தொலையேண்டா..." என்று சீதாவும் கத்தினாள்.

"சொல்ல என்ன இருக்கு? எனக்கு மெடிகல் சீட் கிடைக்கல்லே... லிஸ்ட் பார்த்துட்டு வரேன். பெரிய டாக்டராகணும்னு எப்படியெல்லாம் ஆசைப்பட்டேன். திட்டமெல்லாம் போட்டேன். அதெல்லாம் போச்சு. போயே போச்சு... இந்த சமயத்துல, வருத்தமா இல்லாமல் டான்ஸா ஆடுவேன்...' கொதித்து ஓய்ந்தான் ரமணி.

சீதா, இப்போது அமைதியாக ஒரு பெருமூச்சுவிட்டாள்.

'டேய் ரமணி பையா! உனக்கிருக்கிற மனசுக்கு நீ டாக்டரா போயிருந்தின்னா, உனக்கும் டென்ஷன். உன்கிட்ட வர்ற நோயாளிங்களுக்கும் டென்ஷன். நீ வேறே படிப்பு படிக்கிறதுதான் நல்லது' என்று மனசுக்குள் நினைத்துக் கொண்டாள். ●

# சின்ன பாப்பாவின் பெரிய ஆசை!

"நகைச்சுவை நடிப்பு என்பது எங்களுக்கெல்லாம் தொழில் இல்லை. நாங்கள் எல்லாரும் மக்களைச் சிரிக்க வைக்கும் சேவையைத்தான் செய்து கொண்டிருக்கிறோம். அதற்காக எங்களுக்கு சேவைக் கட்டணம்தான் தருகிறார்கள். நடிப்பதற்கு சம்பளம் தருவதில்லை" என்று நகைச்சுவையாகக் குறிப்பிட்டார் வெண்ணிற ஆடை மூர்த்தி.

மேடையில் ஜெயகாந்தன், கே.பாலசந்தர், சோ, நாகேஷ், மனோரமா, சச்சு, வெ.ஆ. மூர்த்தி. அரங்கின் முதல் வரிசையிலோ, விவேக், வடிவேலு, எஸ்.வி. சேகர், கோவை சரளா, மயில்சாமி, கிரேஸிமோகன், லூஸ்மோகன், பாஸ்கி, சிட்டிபாபு, கிங்காங் என்று பெரியதொரு நகைச்சுவைப் பட்டாளமே திரண்டிருந்தது.

நகைச்சுவை நட்சத்திரங்களான நாகேஷ், மனோரமா, வெ.ஆ.மூர்த்தி, சச்சு போன்ற வர்களுக்கு விருது கொடுத்து கௌரவிக்க வேண்டும் என்று டைரக்டர் கே.பி. சொன்ன ஐடியாவுக்கு, நியூவேவ் கிரியேஷன்ஸ் செயல் வடிவம் கொடுத்து காமராஜர் அரங்கில் பிரம்மாண்டமாய் நகைச்சுவைத் திருவிழா ஒன்றையே நடத்தி விட்டார்கள்.

எஸ்.வி.சேகர் தனது நாடகத்திலிருந்து ஒரு காட்சியை நடித்துக்காட்டி, கலகலப்பூட்டினார்.

"மனுஷங்க பொதுவா மைக்குக்கு பயப்படுவாங்க. இல்லைன்னா, பெண்டாட்டிக்கு பயப்படுவாங்க. நான் இரண்டுக்கும் பயப்படுகிற ஆள்" என்று சுய அறிமுகம் செய்து கொண்ட நடிகர் பாண்டியராஜன், விநோதினியுடன் சேர்ந்து விழாவைத் தொகுத்து வழங்கினார்.

"தமிழில் நகைச்சுவை நடிகர்கள் நிறைய பேர் இருந்தாலும், நகைச்சுவை நடிகைகள் நிறைய பேர் வரவில்லையே! ஏன்?" என்று கேள்வி எழுப்பினார் சோ.

"பாலசந்தர் டைரக்‌ஷனில் நடிக்கிற போதெல்லாம், 'நாகேஷாக இருந்திருந்தால் இன்னும் பிரமாதப்படுத்தி இருப்பார்' என்று அவர் சொல்கிறபோது, நாகேஷ்மீது எனக்குக் கோபம் வரும். அவரது திறமை புரிந்தபின், கோபம் மறைந்து அதீத மதிப்பு ஏற்பட்டுவிட்டது" என்று நெகிழ்ந்த கமல், நாகேஷுக்கு பேனாவைப் பரிசளித்தார்.

"இன்னொரு நாகேஷ் சினிமாவில் வரவில்லை. அதற்குக் காரணம், இன்னொரு பாலசந்தர் கிடைக்கவில்லையே!" என்று பஞ்ச் வைத்தார் விவேக்.

"மனோரமாபோல நகைச்சுவையில் கொடிகட்டிப்பறக்கத்தான் ஆசைப்பட்டேன். ஆனால் ஹீரோயின் ஆக்கிவிட்டார்கள். அந்த ஆசை, சின்ன பாப்பா - பெரிய பாப்பாவில் நிறைவேறியது" என்றார் ஸ்ரீபிரியா.

- மௌலி

படம் : யோகா



யார் இந்த சூர்யா?

பர்சனல் டைரி 25

புல்லாங்குழல்... நான் விரும்பிக் கற்ற இசைக்கருவி. வாசிக்கத் தெரியும் என்பதற்காக அதை நேசிக்கவில்லை. காயப்பட்ட பின்பும் இதயம் கரைந்தோடும் இனிய இசையைத் தருகிற கருவி இது ஒன்றுதான். இயக்குனர் பாலா, கடவுளின் கையிலுள்ள ஒரு புல்லாங்குழல். அவரது உருவமும் புல்லாங்குழலைப் போல ஒல்லியாகத்தான் இருந்தது. 'சேது' படம் பார்த்து விட்டு, வாயடைத்துப்போய் அவரைத் தேடியபோது, அந்த ப்ரிவ்யூ தியேட்டரில் ஒரு சாதாரண ஊழியரைப்போல லிஃப்டுக்கு பக்கத்தில் சுவரோடு சுவராக நின்றிருந்தார். ஒட்டுமொத்த உடம்பிலும் இருபத்தைந்து கிலோ சதையிருந்தால் அதிகம். நெஞ்சுக்கு மேலே பட்டனைத் திறந்து விட்டுக் கொண்டு, சட்டையை கை முட்டி வரை மடித்துவிட்டிருந்தவரின் பாதங்களில் சாதாரண ஹவாய் காலணிகள். இவ்வளவு பெரிய படைப்பைக் கொடுத்துவிட்டு எவ்வளவு எளிய மனிதராக இருக்கிறார். ஆச்சர்யமாக இருந்தது.

படம் பார்த்தவர்களெல்லாம் அவரிடம் கைகுலுக்கிவிட்டு வெளியேறிக் கொண்டிருந்தார்கள். எனக்கோ வார்த்தைகள் வரவில்லை. எனது பிரமிப்பை அவரிடம் சொல்லிவிட வேண்டுமெனத் தவித்தேன். "ரொம்ப பிரமாதமா இருக்கு சார், எனக்கு எப்படிச் சொல்றதுன்னே தெரியலே" என்று சொல்லிவிட்டு வெளியேறிய என்னால் பத்து நாட்கள் ஆகியும் சேதுவின் பாதிப்பிலிருந்து மீள முடியவில்லை. படம் பண்ணினால் நம் சினிமா வாழ்க்கையில் இதுபோல் ஒரு படமாவது பண்ண வேண்டும் என்று உறுதியெடுத்தேன். அதுவே பாலாவின் இயக்கத்தில் நடித்தால் எப்படியிருக்கும்? அந்த நினைப்பு பேராசையாகத் தோன்றியது.

முதல் படத்திலேயே மணிரத்னம், பாலா என்று அவரைத் தகுதியான உயரத்தில் வைத்துப் பேச ஆரம்பித்து விட்டார்கள். இன்று முன்னணியில் இருக்கும் எல்லா ஹீரோக்களும் நீ நான் என அவருக்கு கால்ஷீட் தர முன்வருவார்கள். அவர்களையெல்லாம் இயக்கி முடித்த பின்பு, அதற்குள் நாம் ஏதாவது வெற்றிப்படம் கொடுத்தால், அவரிடம் கேட்டுப் பார்க்கலாம் என்று உள்ளுக்குள் நினைத்துக் கொண்டேன். ஆனால் கடவுளே பக்தனின் வீடு தேடி வந்து வரம் கொடுத்தால் எப்படியிருக்கும்? அப்படித்தான் எனக்கும் பாலா சாருக்குமான அடுத்த சந்திப்பு நிகழ்ந்தது.

காலை 9 மணி இருக்கும். நான்



# உருமாற்றம்!

'தெனாலி' பட பூஜைக்குக் கிளம்பிக் கொண்டிருந்தேன். எங்கள் வீடு இருக்கும் தெருவுக்கு பக்கத்துத் தெருவில் இயங்கி வந்த ஒரு சினிமா அலுவலகத்துக்கு வந்த பாலா, நடந்தே எங்கள் வீட்டுக்கு வந்துவிட்டார். யாரிடமும் எந்த உதவியையும் எதிர்பார்க்காத மனிதர். அப்பாவை, பாலாவுக்கு ரொம்பவே பிடிக்கும். என்னை அவர் இன்னொரு நடிகனாகப் பார்க்கவில்லை என்பது தெரிந்தது. "சூர்யா...





* 'நந்தா' படப் பூஜையில்...

டிரைவர் இருந்தா... ஏ.வி.எம்.மில் என்னை டிராப் பண்ணச் சொல்லுங்க. தெனாலி பூஜைக்குப் போகணும்" என்றார். "நானும் அங்கேதான் போய்க் கொண்டிருக்கிறேன். வாங்க" என்றேன். காரை நான் ஓட்டினேன். முன் சீட்டில் உட்கார்ந்திருந்த அவரிடம் அநாவசியமாகப் பேச அச்சம். அவர் என்ன மனநிலையில் இருக்கிறார் என்று எனக்குத் தெரியாது. இருந்தாலும் இதயத்துள் பொத்தி வைத்திருந்ததை பட்டென்று கேட்டுவிட்டேன்.

"சார், உங்க கூட ஒர்க் பண்ணணும்னு ஆசைப்படுறேன். நீங்க என்னைக்காவது என்னைக் கூப்பிடுங்க" அந்த நொடியில் என் பக்கம் திரும்பி அவர் பார்த்த அந்த ஆழமான பார்வை என் இதயம் வரை ஊடுருவிப் பாய்ந்தது. என் தோளில் கைவைத்துச் சொன்னார். "அதுக்கென்ன சூர்யா? கண்டிப்பா நாம சீக்கிரம் பண்ணலாம்" என்றார். அந்த வார்த்தைகள் ஏதோ பம்பர் லாட்டரி அடித்துவிட்ட சந்தோஷத்தைக் கொடுத்தன. அவர் சொல்லிவிட்டுப்போன இரண்டாவது வாரமே, மீண்டும் என்னைக் கூப்பிட்டு "நான் சொல்ற வரைக்கும் நீங்க எந்தப் படமும் ஒத்துக்க வேணாம். அடுத்த படம் உங்களோடதான்" என்றார். பாலாவின் இரண்டாவது படத்தில் நாம் ஹீரோவா? என்னால் நம்ப முடியவில்லை. அவ்வளவு பெரிய ஹிட் கொடுத்தவருக்கு ரசிகர்களிடம் எத்தனைப் பெரிய எதிர்பார்ப்பு இருக்கும். முதல் வெற்றி கொடுத்த இயக்குனருக்கு இரண்டாவது படம் தலைப்பிரசவம் மாதிரி. அந்த நேரத்தில் டைட்டில் ரோல் கொடுத்து, என்னைக் கருவாகச் சுமக்க அவருக்கு எத்தனைப் பெரிய தாய் மனசு வேண்டும். ஆச்சர்யமும் சந்தோஷமும் அழுத்த, சாப்பாடு இறங்கவில்லை. தூக்கம் வரவில்லை. பத்திரிகைகளில் 'நந்தா' படத்தின் அறிவிப்பு வெளி வந்த பிறகே கொஞ்சம் சகஜமானேன்.

படப்பிடிப்புக்கு முன் பாலா சாரின்

எதிர்பார்ப்புக்குத் தகுந்த மாதிரி நாம் தயாராகி வர வேண்டுமே என்ற பதற்றம். "நான் என்ன செய்யணும் சார். ஏதாவது கற்றுக் கொள்ளட்டுமா?" என்றேன். "அதெல்லாம் ஒண்ணும் வேணாம் சூர்யா! தாடி மட்டும் வளர்த்துக்கிட்டு வாங்க. உடம்பை நல்லா கருக்க வைக்கணும்" என்றார். மேக்-அப் போடுவது அவருக்குப் பிடிக்காது. சினிமாவை காசாகப் பார்க்காமல், இரத்தமும் சதையுமாக அதை வாழ்க்கையாகப் பார்க்கிறவர். அந்தக் கலைக்கு எந்தச் சூழ்நிலையிலும் களங்கமோ, துரோகமோ இழைத்து விடக்கூடாது என்று நினைக்கிறவர். சில நொடிகள் தோன்றி மறைந்து போகிற ஷாட் என்றாலும், ஒரு பிசிறோ தவறோ இருக்கக் கூடாது என்று நினைக்கிற ஃபர்பெக்ஷனிஸ்ட்.

கதை சொல்லவில்லை. ஷூட்டிங் புறப்படுவதற்கு கொஞ்ச நாள் முன்பு, "அம்மா பாசம் கிடைக்காமல் அதற்காக ஏங்குகிற ஓர் இளைஞன்" என்று மட்டும் சொன்னவர், "உன்னை நந்தாவாக படத்தில் ஆணி அடிக்க வேண்டும். காஸ்ட்யூம் மாட்டி, கேமரா முன்னாடி நிக்க வெச்சு, லைட்ஸ் போட்டு நடி என்று சொன்ன மாதிரி இருக்கக் கூடாது. நீ உண்மையாக ஒரு வாழ்க்கை வாழணும். அதை நான் உனக்குத் தெரியாமல் படமெடுத்த மாதிரி இருக்கணும்" என்றார். இந்த வார்த்தைகளே எனக்குப் புதிதாக இருந்தன. பதினான்கு மாதம், வளர்த்த தாடியோடு படப்பிடிப்புக்காக இராமேஸ்வரம் புறப்பட்டேன். அங்கே தினசரி காலை, மாலை இரண்டு மணி நேரம் உடல் கருக்க வேண்டும் என, தேங்காய் எண்ணெயைத் தடவிக் கொண்டு வெயிலில் கிடப்பேன்.

பாலா ஷூட்டிங் ஸ்பாட்டில் யாரையும் பார்க்கமாட்டார். யாரோடும் பேசமாட்டார். அவர் சிரித்து நான் பார்த்ததே இல்லை. காட்சியில் நான் என்ன செய்ய வேண்டுமோ அதை என்னை வைத்துச் செய்யாமல், முதலில் அவர் சுய சோதனை செய்து கொள்வார். ஒரு காட்சியின் டயலாக்கை பேசி, நடித்துப் பார்த்து தூணுக்குப் பின்னால் அழுது கொண்டிருப்பார். அய்யோ... கிளிசரின் இல்லாமல் அவர் அழுது கொண்டிருக்கிறார். நாம் இந்த அளவுக்காவது நடிக்கணுமே என்று தூக்கம் துறந்தேன்.

ஒரு சின்னக் கண் சிமிட்டலைக் கூட திருத்துவார். "தியேட்டரில் படம் பார்த்துக் கொண்டிருக்கும் ஆயிரம் பேரும் உன் முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பார்கள். நீ டயலாக் சொல்லிக் கொண்டிருக்கும்போது கண் சிமிட்டினால், தேவையில்லாமல் பார்வையாளன் கவனம் உன் கண்களை நோக்கித் திரும்பும். பார்வையாளரை ஹிப்னாட்டிஸம் செய்கிற மாதிரி முகத்தின் நடிப்பு இருக்க வேண்டும்" என்று பாலா சொல்லிக் கொடுத்தபோது உண்மையான நடிப்பின், புதிர் முடிச்சுக்கள் மெல்ல விடுபட ஆரம்பித்தன.


• ஈரம் கசிந்த காதல்!

படம் வளர வளர என் கேரக்டரை உணர ஆரம்பித்ததுபோல என்னோடு தொடர்புடைய கேரக்டர்களையும் புரிந்து கொண்டேன். உள்ளுக்குள்ளேயே ஒரு முரட்டுத்தனம், பார்வையில் ஒரு பாறை மனிதன். அம்மாவைப் பார்த்து விட்டால், பாறையில் கசிகிற ஈரத்தைப் போல புறக்கணிப்பின் வலியால் விழியோரம் ஈரம் கசிகிற இளைஞனாய் நந்தாவை மெல்ல மெல்ல எனக்குள் குடியேற்றிவிட்டார் பாலா. "அதோ பாருங்க நந்தா மாதிரியே நடக்க ஆரம்பிச்சுட்டான். கையை எப்படி மடக்கிக்கிட்டிருக்கான் பாருங்க" என கேமராமேனிடம் சொல்ல, டைரக்டர் உங்க மேலே ஹேப்பியாகிட்டார்" என்று என்னிடம் வந்து சொல்வார் ஒளிப்பதிவாளர் ரத்னவேலு. நான் இந்த அளவு பாத்திரமாய் உரு மாறியதற்கு, சினிமாவை, திரை நடிப்பை

ஆழ்ந்து அனுபவிக்க கற்றுக் கொடுத்த பாலாதான் முழுக் காரணம்.

க்ளைமாக்ஸ் தவிர மொத்தப் படப்பிடிப்பும் முடிந்துபோனது. படத்தின் முடிவு பற்றி எங்கள் யாருக்கும் எதுவும் தெரியவில்லை. கைமீறிப் போன பிள்ளையை, தாயே சாப்பாட்டில் விஷம் வைத்துக் கொல்கிறார் என்பது ஷூட்டிங் அன்றுதான் தெரிந்தது. மதியம் வரை ஷூட்டிங் தொடங்கவில்லை. எங்கோ ஓர் இருட்டான அறையில் போய் பாலா சார் படுத்துவிட்டார். மதியம் சாப்பிடக்கூட வரவில்லை. எனக்கும் சாப்பிடப் பிடிக்கவில்லை. மதியத்திற்கு மேல் ஆரம்பித்த ஷூட்டிங் விடிய விடிய நீடித்துக் கொண்டே போனது. ஸ்பாட்டில் மயான அமைதி. எனது அம்மாவாகவே ராஜஸ்ரீ வாழ்ந்தார். இத்தனை நாள் தன் கையால் ஒருவாய் சோறு தராத அம்மா தட்டு நிறைய சாப்பாடு போட்டு வைக்கிறாள். நந்தாவாகிய என்னால் நம்ப முடியாமல் அம்மாவின் கையால் அள்ளித்தரும் பாசக் கவளமாக அதை எதிர்பார்க்கிறேன். அதற்கு உடன்படாத அம்மாவின் கையை வலுக்கட்டாயமாக தட்டில் திணித்து சோற்றை அள்ள வைக்கிறேன். முதல் வாய் சோற்றை மெல்ல ஆரம்பித்ததுமே அதில் விஷம் கலந்திருப்பது தெரிந்து விடுகிறது. அடுத்த நொடியில் அம்மாவை நோக்கி ஒரு பகீர் பார்வை. கடைசி மணித்துளியிலும் பாசத்தை எதிர்பார்க்கும் பரிதாபப் பார்வை. "தெரியும்மா" என்று கண்ணீர் வழியும் கண்களோடு சொல்லிவிட்டு, விஷ உணவு என்று தெரிந்தும் இதுகூட மறுபடியும் கிடைக்காதே என்ற அவசரத்தோடு அடுத்தடுத்த கவளங்களைச் சாப்பிடும்போதே வாய் வழியே ரத்தம்பீறிட அம்மாவின் மடியில் விழுந்து இறந்து போவேன். விஷம் அருந்தாமல் அம்மாவும் அந்த நொடியிலேயே உயிரை விட்டிருப்பார். தமிழ் ரசிகர்களை உலுக்கிய க்ளைமாக்ஸ்.



• உலுக்கிய க்ளைமாக்ஸ்!

க்ளைமாக்ஸ் சமயத்தில் என்மீது முழு நம்பிக்கை வைத்து "நீ என்ன பண்ணினாலும் நல்லா இருக்கும். பண்ணுப்பா" என்று சொல்லிவிட்டார். அன்று படப்பிடிப்பு நடந்த மாதிரியே நான் உணரவில்லை. படம் முடிந்த போது அ... ஆ.. என அரிச்சுவடியில் ஆரம்பித்து டிகிரி முடித்துவிட்டு வெளியே வந்த மாதிரி இருந்தது. ஒரு நடிகன் என்றால் இப்படித் தாண்டா இருக்கணும் என என்னை நானே முழுமையாக உணர்ந்தேன். படம் ரிலீஸ் ஆன பிறகோ, சூர்யாவா இது என ரசிகர்களும் திரையுலகமும் என்னைக் கொண்டாடியது. ஒரே நேரத்தில் 'ஆக்ஷன் ஹீரோ, புரஃபஷனல் ஆக்டர்' என்ற இரண்டு மிகப் பெரிய உயரங்களை எனக்குச் சாத்தியமாக்கியது நந்தா. வீட்டில் அப்பா, அம்மா, தம்பி, தங்கை, எல்லாரும் படம் பார்த்தார்கள். "உன்னை முதன் முதல்லே நந்தாவாப் பார்த்தேன் அண்ணா" என்று தங்கை பாராட்டினார். அப்பாவும், தம்பியும் "ரொம்ப பெருமையா இருக்கு" என்று கட்டிக் கொண்டார்கள். ஆனால் அம்மா படம் பார்த்துவிட்டு எதுவுமே சொல்லவில்லை. ஏதாவது சொல்லுவார் என்று ஒரு வார காலம் அவர் முகத்தையே ஏக்கத்தோடு பார்த்துக் கொண்டு அவரைச் சுற்றிச் சுற்றி வந்தேன். அவர் வாய் திறக்கிற மாதிரி தெரியவில்லை. துக்கம் நெஞ்சை அடைக்க "நான் என்னம்மா தப்புப் பண்ணினேன். படம் பார்த்துட்டு ஏன் எதுவுமே சொல்ல மாட்டேங்கறீங்க?"

(அடுத்த இதழில் விடைபெறுகிறேன்)

# சின்னக்கோலம், ஒரு விளக்கு!

கலாமந்திர் டிரஸ்டின் வருடாந்தர நிகழ்ச்சி என்றால் அதில் ஓர் ஒழுங்கும் அமைதியும் இருக்கும். இந்த வருடமும் அப்படியே!

நிறுவனர் 'எஸ்ஃபீல்டு' விசுவநாதன் 70-வது பிறந்த நாளையும், கலாமந்திரின் வெள்ளிவிழாவையும் இணைத்து, சென்ற வாரம் நடந்த டாக்டர் பாலமுரளி கிருஷ்ணாவின் இசையும் பேராசிரியர் சந்திரசேகர் - லீலா சாம்சன் பரத நாட்டியமுமாக, நடந்த நிகழ்ச்சி எப்படி இருந்தது?



• 'பாலமுரளியின் குரல் அப்படியே இருக்கிறது என்பது இருக்கட்டும், 'எந்தரோ மகானுபாவுலு' என்று தியாகராஜரில் தொடங்கி, ஒரு தீட்சிதர், ஒரு சியாமா சாஸ்திரி, ஒரு சுவாதித் திருநாள் என்று பாடல்களைப் பொறுக்கி எடுத்தல்லவா பாடினார்? அவருடைய சாகித்தியத்தையும் விட்டு வைக்காமல் முத்தாய்ப்பு வைத்த சுச்சிதம் அருமை!''

• 'தோடியில், 'நீ மாய தெலியலேரு சாம்பவி' வரியில் நிரவல் பண்ணியது அற்புதம்!'

• 'லீலா சாம்சனின் நளினம் ப்ளஸ் மெருகு நாட்டியத்தின் சிறப்பு.'

• 'சந்திரசேகரிடம் என்ன அங்க சுத்தம்! எழுபது வயதில் இப்படி நிருத்தாவில் அசத்திவிட்டாரே!'

• 'ஸ்டேஜ் சிம்பிள் அன்ட் எலிகன்ட். சின்னப் பூக்கோலம். ஒரே ஒரு குத்து விளக்கு..'

• 'எல்லாம் லீலாசாம்சனே கவனித்துச் செய்ததாம்!'

ஆடியன்ஸ் தரப்பிலிருந்து

தொகுப்பு : **சித்தார்த்**





# இளைச்சல்!

ஆத்துல தண்ணி வந்தா அயிரை மீன் கரைக்கு வரும்னு சொல்லுவாங்க... அயிரை மீன் வாசனை கமகம என்றிருந்தது...

"மணிகண்டா சாப்பிட வா, உனக்குப் பிடிச்ச அயிரை மீன் குழம்பு!"

"இதோ வந்துட்டேம்மா"

கை, கால், முகம் கழுவி ஆவலாக உட்கார்ந்தான்!

"ஆகா, வாசனை தூக்குதே! ஒரு பிடி பிடிக்க வேண்டியதுதான்"

தனது பேண்ட் பட்டனைக் கழற்றி விட்டு வயிறாரச் சாப்பிட்டான்!

"வெளச்சலெல்லாம் எப்படியாயிருக்கு"

"பரவாயில்லை..."

"இந்தப் பாழா போன வானம் ஒழுங்கா பெய்யக்கூடாது. என்ன பண்றது, யாரு செஞ்ச பாவமோ? திடீர்னு பேஞ்சு கெடுக்குது, இல்லாட்டி காஞ்சு கெடுக்குது. சரி, சரி நாளைக்கு எத்தனை லோடு வரும்?"

"இருபது லாரிக்கு குறையாதும்மா"

"இருபதுன்னா... ம், பரவாயில்லை... இதுல எத்தனை லாரிக்கு அடியில பலகை உடைஞ்சு இருக்கோ? எத்தனை மூட்டையில ஹூக்கைப் போட்டு இருக்காங்களோ? எத்தனை மூட்டையை எலியும் பெருச்சாளியும் கொத்தி வைச்சிருக்குதோ... அந்த ஆபீசரு எப்படிடா?"

"அவரு ரொம்ப கரெக்டானவரும்மா; பத்து மணிக்கெல்லாம் 'டாண்'னு ஆபீஸ்ல இருப்பாரு"

"நாளையபொழுது நல்ல பொழுதா விடியணும், மழை பெய்யாம இருக்கணும். ரோடு வேற குண்டும் குழியுமா இருக்கு... பாவம், புள்ளைக்குச் சிரமமா இருக்கும்... மணிகண்டா, நல்லா தூங்கு. சரியா பத்து மணிக்கு எல்லாம் அங்க இருக்கணும்"

கால் கட்டை விரலிலிருந்து தலை வரை போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டான்.

பெரிய கோயிலின் திருப்பள்ளி யெழுச்சி ஒலிநாடா இறைவனை மட்டு மல்ல; இவனையும் எழுப்பியது.

ஓடம்போக்கி ஆற்றில் நான்கு வருடங் களுக்குப் பிறகு தண்ணீர் கரை புரண்டோடுகிறது. ஆற்றுக் குளியல் சுகமே அலாதி சுகம்தான். குளித்து வீடு திரும்பினான்.

தயாராக அணிய வேண்டிய சட்டையும் பேண்டும் எதிரில் தொங்கியது.

புறப்பட்டான். மஞ்சள் பையுடனும் வாருகோலுடனும், டி.சி.எம்.எப் - க்கு எடை போட வரும் லாரியிலிருந்து சிந்தும் நெல்மணிகளைச் சேகரிக்க... ○

விநாயக சுந்தரம்

# உறவுச் சங்கிலிகள்!

தேனில் ஊறிய பலாச்சுளைகளின் தித்திப்பு, சுற்றுப்புறப் பகுதிகளின் வளர் தாவரமான முந்திரிப் பழங்களின் கரகரப்பு, பதமாக நெய்யில் வறுத்தெடுக்கப்பட்ட முந்திரிப் பருப்புகளின் மொறுமொறுப்பு. இவைகள் மூன்றும் சேர்ந்த மொத்தக் கலவையாக நமக்கு காணக் கிடைத்தார், பண்ருட்டி வாசகர் எஸ்.என்.சண்முகம். வயது 69. ஓய்வு பெற்ற முதுநிலை கால்நடை மேற்பார்வையாளர். அவர்களுக்கு ஒரு பெண், மூன்று மகன்கள். அனைவருக்கும் திருமணமாகி, வெவ்வேறு ஊர்களில் வசித்து வருகின்றனர். இரண்டாவது மகன் என்.எஸ். கார்த்திகேயனின் குடும்பம் மட்டும் பண்ருட்டியில் தந்தை வீட்டில் வசிக்கிறது.

"வாரம் ஒரு வாசகர் குடும்பம் தொடர் வந்ததிலிருந்து, எங்க அப்பாவுக்கு ஒரே பரபரப்புங்க. ஏதோ டீன் ஏஜ் பையன் மாதிரி தவிச்சுக் கிடந்தார். காரணம், அந்தத் தொடர்ல ஒரு வாரம், நம்ம குடும்பம் கட்டாயம் இடம் பெற்றாக வேண்டுமென எதிர்பார்ப்பு அவர்கிட்டே ரொம்பவே தொத்திக்கிடுச்சு. என்னோட அப்பாவும் அம்மாவும் அறுபது வருஷ கல்கி வாசகர்கள். நீங்க வந்தது மூலமா அவங்களோட எதிர்பார்ப்பு நிறைவேறிடுச்சு." என்கிறார் எஸ்.என்.சண்முகத்தின் இரண்டாவது மகன் ஆன எஸ்.கார்த்திகேயன். இவர் ரிலையன்ஸ் ஆஃப் இந்தியாவில் பணிபுரிந்து வருகிறார்.

"நாங்களும் கல்கி வாசகர்களா ஆகி விட்டோம். தலைமுறைகள் தோறும் தொடர்ந்து

■ சண்முகம் குடும்பத்தினர்...





வர்ற உறவுச் சங்கிலியா நாங்க இதனைக் கொண்டு வந்துவிடுவோம்!'' எனக் கூறி அன்புடன் வரவேற்றார், கார்த்திகேயனின் மனைவியும் என்.சண்முகத்தின் மருமகளும் ஆன சித்ரா.

''அமரர் கல்கியின் ஜீவன் நிறைந்த எழுத்துக்களை இன்று வரை நேசித்து வருபவர். பொய்மான் கரடு நாவலைப் படித்துவிட்டு, அதனை நேரில் பார்க்க சேலம் பகுதிக்கு என்னையும் சேர்த்து அழைத்துப் போனார்'' எனச் சொல்கிறார் சண்முகத்தின் அன்பு மனைவி கமலா.

சண்முகம், முக்கனி மாத இதழ் ஆசிரியராக இருந்து வருகிறார். இவ்விதழ் பண்ருட்டி ரோட்டரி சங்கத்தின் மாத வெளியீடு. ரோட்டரி சங்கத்தின் முன்னாள் மாவட்டத் தலைவராக இருந்து, தற்போது பண்ருட்டி ரோட்டரி சங்கத்தின் சாசன உறுப்பினராகச் செயல்பட்டு வருகிறார் எஸ்.என் சண்முகம். சமூகப் பணி, தொழிற் பணி, சங்கப் பணி, பன்னாட்டு இயக்கப் பணி போன்ற நால்வகை சேவைகளில் சிறந்து விளங்கியமைக்காக, இந்த அறுபத்தொன்பது வயது இளைஞருக்கு பன்னாட்டு ரோட்டரி அமைப்பு விருது வழங்கி கௌரவித்துள்ளது.

''பண்ருட்டியிலிருந்து பத்து கி.மீ. தூரத்தில் இருப்பது சிறு கிராமம். (கிராமத்தின் பெயரே இதுதான்!). இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு அங்கு கால்நடைகளை அபூர்வமான நோய்கள் தாக்கத் துவங்கின. தமிழ்நாட்டிலேயே இங்குதான் முதன் முதலாக அந்த நோய்கள் தங்கள் அடையாளத்தைக் காட்டின. நூற்றுக்கணக்கான கால்நடைகள் மடிந்தன. இது குறித்து அப்போது சட்டசபையில் கூட கேள்வி எழுப்பப்பட்டது. என்னால் அந்த செய்திகளைக் கேட்டுவிட்டு சும்மா இருக்க முடியவில்லை. கால்நடை பராமரிப்புத் துறையில் பணியாற்றி உள்ளதால், இது விஷயமாக நாம் ஏதாவது செய்தாக வேண்டும் என்று பலவித முயற்சிகள் மேற்கொண்டேன். பைசர் நிறுவனத்தின் உதவியுடன், கால்நடை பராமரிப்புத் துறை ஆதரவுடன், பண்ருட்டி ரோட்டரி சங்க வழிகாட்டுதலுடன் சிறு கிராமத்தில் இலவச கால்நடை மருத்துவ முகாம் நடத்தினோம். மாடுகளுக்கு கோமாரி நோய், ஆடுகளுக்கு குடற்புழு அவதி, கோழிகளுக்கு கரைச்சல் இவற்றுக்கான நோய் தடுப்பூசி மற்றும் மருந்துகள் அளித்துப் பராமரித்து மீதமுள்ள கால்நடைகளை அந்த நோய்களின் பிடிகளிலிருந்து காப்பாற்றினோம்'' என நினைவு கூறும் சண்முகம் தொடர்ந்து

''கிராம மக்களின் பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் பக்கபலமாக இருந்து வருபவை கால்நடைகள். அவைகளே ஒரு சமூகத்தின் காவல் தெய்வங்கள். அவைகளைக் காப்பாற்றிவிட்டால் ஒரு சமூகத்தையே காப்பாற்றியதற்குச் சமம் ஆகும்!'' எனக் கூறுகிறார்.

''கல்கியில் 'நடக்குமென்பார் நடக்கும்' பகுதி எனக்குப் பிடித்தமானது. வார ராசி பலனைக் கூட பாசிடிவ்வாக எழுதி வரும் ஒரே பத்திரிகை கல்கி!'' எனப் புகழ்மாலை சூட்டுகிறார் ரோட்டரியன் எஸ்.என்.சண்முகம்.

- கட்டுரை, படங்கள் :

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# நீங்கள் கேட்டவை —தராசு

● செ.சத்தியசீலன், கிழவனேரி

? காங்கிரசுக்குள் புதிதாக கராத்தே வரப் போகிறதாமே?

! பழைய கராத்தேதான்; புது நிறத்தில் பெல்ட்டோடு நுழையப் பார்க்கிறார்.

● லலிதா செல்லப்பா, பம்மல்

? சமீப காலமாக பொதிகை தொலைக்காட்சியும் வானொலியும் கருணாநிதிக்கு முக்கியத்துவம் கொடுத்து அவர் கருத்துக்களை அதிகமாக ஒளி / ஒலி பரப்பும் ரகசியம் என்ன...?

! மத்திய அரசில் தி.மு.க.வின் ஆதிக்கம் நீடிக்கும் வரை ஆகாசவாணியும் பொதிகையும் 'முரசொலி'ப்பதில் என்ன ஆச்சர்யம்!

● வி.மோகன், நெல்லிக்குப்பம்

? விமர்சனங்களைத் தாங்கிக் கொள்ளும் பக்குவம் பா.ம.க.வுக்கு இன்னும் வரவில்லையே?



• புது நிற பெல்ட்!



• பணம் மிச்சம்!

! எந்த கட்சிக்கும் அந்தப் பக்குவம் இருப்பதாகத் தெரியவில்லை. என்ன... மற்ற கட்சிகள் ஆட்சேபணைக் குரல் எழுப்பினால், பா.ம.க.வினர் ஆட்சேபணை முஷ்டியை மடக்குவர் என்பது தான் வித்தியாசம்.

● ஜி.மாரியப்பன், சின்னமனூர்

? "இறந்த பின்னும் கூட கவிஞர் கண்ணதாசன் என்னுடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார்" என்றும், "பத்து நாட்களுக்கொருமுறை என் கனவில் வந்து போகிறார்" என்றும் எம்.எஸ். விஸ்வநாதன் பேசியுள்ளாரே?

! அது எம்.எஸ்.வியின் பிரத்யேக உலகம்... கவிஞர் அந்தச் சிறு வட்டத்தையும் தாண்டி லட்சோப லட்சம் ரசிகர்கள் மனத்திலும் அவரது ஆயிரக்கணக்கான இலக்கியத் தரமான கவிதைகளிலும் 'சேரமான் காதலி' போன்ற நூதன படைப்புகளிலும் 'அர்த்தமுள்ள இந்து மதத்திலும்' வாழ்கிறார்; வாழ்வார்!

● பி.பாலாஜி கணேஷ், கோவிலாம் பூண்டி ★

? தமிழகத்தில் பா.ஜ.க. தனித்துப் போட்டியிடும் என்பதைத் தினமும் தலைவர்கள் மாறி மாறி அறிவிக்கிறார்களே, என்ன காரணம்?

! "பசிக்குது, பசிக்குது" என்று சொல்லிக்கிட்டே இருந்தாத்தான் அம்மா சோறு போடுவாங்க என்பது காரணமாயிருக்கலாம்.

● எச்.ஆண்டனி தமிழரசன், மும்பை

? இசையமைப்பாளர் இளையராஜா, பாரதிக்கு நிகரானவர் என்கிறாரே கமல்... கொஞ்சம் அதிகமாகப்படவில்லை?

! கவிதையைப் புதிய சிந்தனைகளுடன் எளிமையாக்கி மக்களிடையே பரவலாக்கியவர் பாரதி. அதுபோல் திரை இசையில் 'ஹம்மிங்'குக்கு வசதியாகப் புதுமையைப் புகுத்தி, முன்னிலும் அதிகமான ரசிகர்களைப் பெற்றுத் தந்தவர் இளையராஜா என்கிற அர்த்தத்தில் சொல்லியிருக்கலாம்! அதுக்கு மேலே ரொம்ப 'டீப்'பா யோசிக்காதீங்க.

● வி.மோகன், நெல்லிக்குப்பம்

? சாராய ரெய்டுக்குச் சென்ற போலீஸாரை, சாராய வியாபாரிகள், பொது மக்கள் கட்டிவைத்து உதைத்துள்ளனரே?

! விஸ்கி, பிராந்தி, பீர் கடைகளைத் திறந்து வைத்துவிட்டு, சாராயம்

கள்ளுக்கு மட்டும் தடை விதிச்சா இப்படித்தாங்க நடக்கும். போலீஸ், தார்மிக பலம் இழந்து போச்சுன்னா உடல் பலமும் மனோ பலமும் எங்கே இருக்கும்?

● **அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி - 21**

***? 'அரசு விழாக்களில் ஆடம்பரம் கூடாது' என்று காங்கிரஸ் தலைவர்களுக்கு சோனியா காந்தி பதினெட்டு கட்டளைகள் பிறப்பித்திருப்பது எதைக் காட்டுகிறது?***

***கருத்து உண்மைதானா?***

! "பீஹார் சட்டமன்றத்தைக் கலைத்தது சட்டவிரோதமானது" என்று மட்டுமே கூறி நிறுத்திக் கொண்ட உச்சநீதிமன்றத்தின் தீர்ப்பு முழுமையாகக் கிடைக்கப் பெற்ற பிறகுதான் கருத்துக் கூற முடியும்.

● **லெ.நா.சிவகுமார், சென்னை - 33**

***? 'கட்சி மாநாடுகள் நடத்துவதெல்லாம் வீணான ஆடம்பரச் செலவு; அத***

• ஒப்பு... நோக்கல்... ... சரியா?







# பா.ம.க.வுக்கு இன்னும் பக்குவம் வரவில்லையே?

! அடிப்படையான விஷயங்களைக் கூட கட்சித் தலைமை இன்னமும் வலியுறுத்திக் கற்றுத் தர வேண்டியிருக்கிறது என்கிற அவல நிலையைக் காட்டுகிறது.

● **வி.ஜானகி, சென்னை - 4**

***? பீஹாரில் மீண்டும் சட்டமன்ற தேர்தல் நடைபெறக் காரணம் அம்மாநில ஆளுநர் பூட்டாசிங்தான் என்ற***

***னால் சாதிக்கக் கூடியது ஒன்றும் இல்லை' என்று ஒரு பேட்டியில் ஜெ. சொல்லியிருப்பது குறித்து...'***

! சென்னை நேரு ஸ்டேடியத்தில் நடந்த உழவர் மாநாடு, ஏறத்தாழ கட்சி மாநாடு அல்லாமல் வேறு என்னவாம்? அது போல் பெயர் மாற்றத்துடன் வேறு பல மாநாடுகள் நடக்கும் - அரசு



* அவசர ஜகா!

* வாழும் கவிஞர்...!



செலவில்! கட்சிக்குப் பணம் மிச்சம்.

● எஸ்.எம்.ஷாஜஹான், மேலப்பாளையம் ❒

? வரலாற்றுச் சுவடுகளில் பொறிக்கப்பட வேண்டிய சம்பவம் ஏதும் தற்போது உண்டா?

! மத்திய அரசில் அமைச்சர்களாகவும் எம்.பி.க்களாகவும் இதர உயரதிகாரிகளாகவும் அங்கம் வகித்த 465 வி.வி.ஐ.பி.க்கள், பதவிக்காலம் முடிந்த பின்னரும் அரசுக் குடியிருப்புகளைக் காலி செய்யாமல் அழிச்சாட்டியம் செய்கிறார்களே என்று பொதுநல மனு தொடுக்கப்பட, உச்சநீதிமன்றம் அத்தனை வி.வி.வி.ஐ.பி.க்களையும் ஒருசேர கண்டனம் செய்துள்ளது. ஒரே சமயத்தில் இத்தனை வி.வி.ஐ.பி.க்கள் கண்டனம் பெறுவதை வேறெந்த தேசத்து வரலாற்றில் காண முடியும்!

● எம்.சிவகுருநாதன், தஞ்சாவூர்

? 'கேஸ் விலை உயர்வைச் சரிக்கட்ட, பெண்கள் விலையுயர்ந்த புடைவை எடுப்பதை நிறுத்த வேண்டும்' என்று மணிசங்கர் அய்யர் சொன்னது குறித்து...?

! அவர் கூறியது முற்றிலும் தவறு அல்ல என்றாலும் ஒரு சிறிய எண்ணிக்கையில் உள்ள பெண்களுக்கே பொருந்தும். பொத்தாம் பொதுவாக அப்படிப் பேசியிருக்கக் கூடாது. ஆட்சேபணை பலமாக எழுந்ததும், வழக்கம் போல், தாம் அப்படிச் சொல்லவில்லை என்றும், மீடியாதான் தப்பாக கருத்து பரப்பிவிட்டது என்றும் ஜகா வாங்கிவிட்டார்.

● குட்டி பிரசன்னா, கரூர்

? பூகம்பத்தில் மூவாயிரம் தீவிரவாதிகள் இறந்துபோன செய்தியை முஷாரஃப் மறைப்பதற்கு என்ன காரணம்?

! அப்படி மறைக்காவிட்டால் இன்னும் குறைந்தபட்சம் முப்பதாயிரம் தீவிரவாதிகள் அப்பகுதியில் உயிர்தப்பி இந்தப் பக்கம் ஊடுருவக் காத்திருப்பதை ஒப்புக்கொண்டதாகிவிடுமே!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? தமிழகம் முழுவதும் தொண்டர்கள் வழங்கிய ஒரு கோடி நிதியை இ.கம்யூனிஸ்ட் கட்சிக்கே வழங்கிவிட்டாரே நல்லகண்ணு?

! அதுதான் தர்ம நியாயம். அவர் அவ்வாறு செய்யாதிருந்தால்தான் அதிசயப்பட வேண்டும். எதிர்பார்த்த நற்செயல் என்பதால் அவர் மீது பெருகும் மரியாதை குறைந்துவிடாது!

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
**எஸ்.எம்.ஷாஜஹான்,**
எம்.எம்.ஜெராக்ஸ்,
பஜார் திடல்,
மேலப்பாளையம்.

* ரூ.50 பரிசு பெறுபவர் :
**பி.பாலாஜி கணேஷ்,**
வேளாளர் தெரு,
கோவிலாம்பூண்டி,
அண்ணாமலை நகர் (வழி),
சிதம்பரம் - 608 002.



# அன்புமணி கவனத்திற்கு...!

சென்னை ராயபுரத்துல இருக்காரு மிஸ்டர் எக்ஸ். அவரு ஒரு காலேஜ் குமாரியை ஒரு தலையா லவ் விட்டுருக்காரு. அதுபோக துபாய்ல வேலை கெடைச்சு, போகறதுக்கு விசா, டிக்கெட் எல்லாம் ரெடி பண்ணிட்டாரு. அந்தத் தைரியத்துல காலேஜ் விட்டு வர்றப்போ குமாரிகிட்ட போயி ஹார்ட்டை ஓப்பன் பண்ணி 143 சொல்ல, குமாரி மிரண்டு போயி 144 சொல்ல, மிஸ்டர் எக்ஸ், குமாரிக்கு பப்ளிக்ல நச்சுன்னு ஒரு இச் கொடுத்துட்டு, 'இப்ப என்ன பண்ணுவ! இப்ப என்ன பண்ணுவ!'ன்னு படம் காட்டிட்டு துபாய்க்கு பிளைட் ஏறிட்டாராம். குமாரி குமுறிப் போயி தன்னோட அப்பாகிட்ட சொல்ல, அப்பா போலீஸ்கிட்ட சொல்ல, போலீஸ் டிராவல் ஏஜென்சி மூலமா அவர் விசாவை கேன்சல் பண்ணி, எக்ஸ்-ஐ துபாய்ல இருந்து துரத்தி அனுப்ப வைச்சுட்டாங்களாம்! இதுல இருந்து என்ன தெரியுது. முறையில்லா முத்தம், நுரை தள்ள வைச்சிரும்!

ஆந்திரா - சித்தூர் மாவட்டம் - கொத்தலிரிபள்ளி பஞ்சாயத்து - கவுசானை பள்ளி அரிஜன்காலனி... இந்தக் கிராமத்துல 1999-ல இருந்து 22 பேர், எல்லாருமே இளைஞர்கள் மர்மமா இறந்துருக்காங்க! ஊர் மக்கள்கிட்ட பயம் அதிகமாக 'இது பேய், பிசாசு வேலை'ன்னு மிரண்டு போயி ஊரைக் காலி பண்ணிட்டாங்களாம்! 'வாஸ்துப்படி ஊர் அமைப்பு சரியா இல்ல'ன்னு ஒரு ஜோசியக்காரன் வேற சொல்லி வைக்க, சப் - கலெக்டர் மக்கள்கிட்ட, 'அரசாங்க செலவுலேயே வாஸ்துக் கோளாறைச் சரி பண்ணுறோம். ஊருக்கு கரண்ட் வசதி பண்ணிடறோம்! 24 மணி நேரமும் லைட்டு எரிஞ்சுக்கிட்டே இருக்கட்டும்! தயவு செஞ்சு ஊருக்குப் போங்க!'ன்னு கெஞ்சியும் யாருக்கும் போறாப்ல ஐடியாவே இல்லையாம்! என்னத்தச் சொல்ல?! இன்னமும் கரண்ட் வசதி இல்லாத கிராம மக்கள் இப்படி ஒரு டிராமா பண்ணுனாங்கன்னா, வொர்க் - அவுட் ஆகும்னு தோணுது!

இதனால் சகல பாண்ட் ரசிகர்களுக்கும் அறிவிப்பது என்னவென்றால், புதிய ஜேம்ஸ் பாண்டாக நடிக்க 'டேனியல் க்ரெய்க்' என்ற 37 வயது இங்கிலாந்து நடிகரைத் தேர்ந்தெடுத்துள்ளனர். அவருடன் லேடி பாண்டாக ஏஞ்சலினா ஜூலி சோடி போடுவார் என எதிர்பார்க்கப்படுகிறது. எல்லாத்தையும்விட சூப்பர் மேட்டர் புது பாண்ட், படத்துல சிகரெட்டே பிடிக்க மாட்டாராம். 'படத்துல நாயகன் சிகரெட் பிடிக்கறதைப் பார்த்து இளைஞர் சமுதாயம் கெட்டுப் போகுது! அதனால இந்த முடிவை நான் வரவேற்கிறேன்!' - இப்படி புது பாண்ட் அறிக்கை விட்டுருக்காரு! என்ன அன்புமணி சார், அப்படியே புது பாண்டுக்கு ஒரு ரசிகர் மன்றம் ஆரம்பிச்சு அதுக்கு நீங்களே 'தல' ஆகிட்டீங்கன்னா, சர்வதேச லெவல்ல உங்க பேரைப் பரப்பலாம்ல! என்ன சொல்லுறீங்க!

**சின்னான் செய்திகள்**

# இளமை கல்கி

"நேத்து பஸ்ஸுல வர்றப்போ ஒருத்தன் என் பாக்கெட்ல ப்ளேடை போட்டுட்டான்."

"அச்சச்சோ, அப்புறம் என்ன ஆச்சு?"

"என்ன பண்றது, அந்த ப்ளேடை எடுத்து தூக்கிப் போட்டுட்டேன்."

**பையன்:** பெண்ணே, உன்னை பார்த்தது முதல் எனக்கு சாப்பாடு இல்லை, வேலை செய்ய முடியவில்லை, தூங்க முடியவில்லை... ஏன், ஒரு வாய் தண்ணீர் கூட குடிக்கவேயில்லை.

**பெண்:** (வெட்கப் புன்னகையுடன்) நீ என்னை லவ் பண்றே தானே?

**பையன்:** போடி இவளே! என் மணிபர்ஸை காலி பண்ணா என்னால எப்படி ஒழுங்கா வாழ முடியும்?

**ச**ட்டம் பயிலும் மாணவர்களுக்கென்று சர்வதேச அளவில் ஒரு போட்டி வைக்கப்படும். 'மூட் கோர்ட் காம்படிஷன்' என்ற பெயரில் நடத்தப்படும் இப்போட்டியில் மாணவர்களின் வழக்காடும் திறமை கூர் பார்க்கப்படும். காமன் வெல்த் நாடுகளைச் சேர்ந்த மாணவர்களிடையே நடந்த Moot போட்டியில், சிறந்த வாய்ச்சொல் வீரராக அதாவது, Best Mooter ஆக ஜெயித்தவர் நம் ஊரைச் சேர்ந்த சுஹ்ரித் பார்த்தசாரதி.

"தாத்தா, அப்பான்னு குடும்பமே கறுப்பு கோட் மேலே அப்படியொரு பாசம். எனக்கும் அதே உணர்வுதான். எந்தவொரு அத்துமீறலையும் சட்டத்தால் வளைக்க முடியுமே" என்று கண்களில் நம்பிக்கையைத் தேக்கி வைத்திருக்கும் சுஹ்ரித் கொல்கத்தா நேஷனல் யூனிவர்சிட்டி ஆஃப் ஜீரிடியல் சயின்ஸஸ் சட்டக் கல்லூரியின் மூன்றாம் ஆண்டு மாணவர்.



லண்டன் போறதுக்கு முன்னால இங்கேயே நிறைய போட்டிகள் வெச்சாங்க. நானும் என் நண்பன் சாஷ்வத்தும் சட்ட விதிகளைக் கரைச்சுக் குடிச்சதால பின்னி எடுத்தோம். அப்புறம் லண்டனுக்குத் தேர்வாகிப் போனா, போட்டி கடுமையா இருந்தது. சர்வதேச சட்ட விதிகளை மையமா வைச்சு ஒரு கேஸ் கொடுப்பாங்க. அதுக்கு ஆதரவாகவும் எதிர்ப்பாகவும் மாறி மாறிப் பேசணும். நடுவர்களாக அமர்ந்திருக்கிற நீதிபதிகள் கேள்விக் கணைகளை வீசினா, அப்படியே அவங்க மேலே திருப்பி வீசற அளவுக்கு லா பாயிண்ட்ஸ் பலமா இருக்கணும். எங்க டீம் பைனல்ல தோத்தாலும் 'Best mooter' அவார்ட் எனக்குத்தான் கொடுத்தாங்க" என்கிறார் சுஹ்ரித். இவரின் அம்மா கர்நாடக சங்கீத பாடகி என்பதால் மிருதங்கமும் கற்றிருக்கிறார்.

"சட்டம் படிக்க வருபவர்களோட எண்ணிக்கை இப்போ ரொம்ப அதிகமா

## வாய்ச் சொல்

ஒரு பிஸ்கட் வியாபாரி தன் காதலிக்கு எப்படிக் கடிதம் எழுதுவார்?
டியர் 'மேரி',
நேற்று உனக்கு 'குட் டே' வா?
காதல் விண்ணப்பித்தால்
'50 - 50' என்கிறாயே நீ?
உனக்கென்ன 'லிட்டில் ஹார்ட்ஸ்'ஸா,
இதனால் நான் ஆகிறேன் 'கிராக்'ஜேக்!

நான் சி.எம். நீ பி.எம்
நான் பிசிஓ நீ ஐஎஸ்.டி.
நான் கையேந்தி பவன்
நீ சரவண பவன்
நான் முருகன் டாலர்
நீ யு.எஸ். டாலர்
நான் அரை ஓசு
நீ... முழு ஓசு!

# இமாமி... சுனாமி?

திருமணம் முடித்த கையோடு, புலி தன் நண்பர்களுக்கு ட்ரீட் வைத்தது. அப்போது ஒரு எலி உள்ளே நுழைய முற்படவே, டென்ஷனான புது மாப்பிள்ளை புலி, எலியின் வாலைப் பிடித்து தூக்கி 'உன்னை யார் வரச் சொன்னது' என்று கேட்க, கடுப்பான எலி சொன்னதாம், "யோவ், விடு முதல்ல, நானும் கல்யாணத்துக்கு முன்னாடி உன்னை மாதிரி புலிதான்"

யிட்டே வருது. காலேஜுக்கு வந்தபிறகு பேசக்திறமையிலிருந்து சகலமும் கத்துக்க முடியும்" என்று கல்லூரி ஞாபகத்துக்குள் மூழ்கி வந்த சுஹ்ரித்துக்கு, இந்திய அரசியல்வாதிகள் மீது நிறைய கோபம்.

"தன் சுயநலமே பெரிதுன்னு நினைக்கிறாங்க. அவங்களோட அரசியல் வாழ்க்கை உயர்ந்தா மட்டும் போதாது. மக்கள் வாழ்க்கையும் உயர பாடுபடணும். அதுல கிடைக்கிற சந்தோஷம் வேறெதிலுமில்லை."

- ச.ந.கண்ணன்

இமாமிக்கும் சுனாமிக்கும் என்ன வித்தியாசம்?
இமாமி ஃபேஸ் வாஷ்
சுனாமி டோட்டல் வாஷ்!

- கலை

# வீரர்!

(எஸ்.எஸ். மியூஸிக் பலோமாவைச் சிரிக்க வைத்த எஸ்.எம்.எஸ். ஜோக்ஸ்!)

# இளமை கல்கி

# ஊர் சுத்துங்க!

'ட்ராவல் ஈஸ் ஃபன்' என்று சொல்லிவிட்டு ஒருமுறை நடுநடுங்கினார் செலினா. ஒரு குட்டி ஸ்வெட்டர், அதற்கு மேல் ஒரு பெரிய ஸ்வெட்டர், தலையில் மங்கி கேப்.

'இந்தக் குளிருக்கு மங்கி கேப் எல்லாம் போதலை. கரடி ட்ரெஸ்தான் போட்டுக்கணும். இல்லேன்னா நீல் ஆம்ஸ்ட்ராங்கோட காஸ்ட்யூமை கடன் வாங்கிப் போட்டுக்கணும்... ஊஊஊஊ' ஒவ்வொரு வார்த்தைக்கும் இடையே போதிய இடைவெளி விட்டு நிதானமாகத் தடுமாறினார் ஜூலி.

சென்னையிலிருந்து மிலிட்டரி பேக்கை தூக்கிக்கொண்டு ஜாலியாக, 'சுத்தி சுத்தி வந்தீக' பாடலை முணு முணுக்கும் ஹேர்பின் வளைவுகளில் சுற்றிக்கொண்டிருந்தனர் இருவரும். பயணம் முழுவதும் செலினா 'வெரி ஸ்டெடியாம்', ஜூலியும் அப்படித்தானாம். ஆனால் ஒரே ஒரு குட்டி ஹேர்பின் வளைவில் மட்டும் ஒருமுறை 'உவ்வே'. ஆனால் அதைப் பற்றி எழுத வேண்டாம் என்று சொல்லிவிட்டார்.

'நம்ம நாட்டு யூத்ஸுக்கு ட்ராவல் கான்செப்டே கிடையாது. மாசா மாசம் சீட்டுக் கட்டி கிரைண்டர், டி.வி.டி., ஜிமிக்கி வாங்கினாலும் வாங்குவாங்க. ட்ராவல் செய்ய மாட்டாங்க. இதே வெளிநாட்டுல பார்த்தீங்கன்னா, ஆளுயுர பேகை தோள்ல மாட்டிக்கிட்டு பசங்களும் பொண்ணுங்களும் ஜாலியா நாடு நாடா சுத்துவாங்க. ட்ராவல் அண்டு லிவிங் ல பார்த்தீங்கன்னா...' சொல்லிக் கொண்டிருக்கும்பொழுதே செலினாவின் ஒரு கண்ணில் ஆல்ப்ஸ் மலையும் மற்றொரு கண்ணில் ஆம்ஸ்டர்டாமும் மின்னியது.

''ஆ....ஆ.... மாாாா'' என்று வழிமொழிந்தார் ஜூலி. பள்ளிச் சுற்றுலாவில் ஏற்கனவே ஊட்டி வந்திருக்கிறாராம். ஆனால் கடைசிவரை வேன் கதவைத் திறக்கவேயில்லையாம். 'அதோ அதுதான் தற்கொலைப் புள்ளி' என்று ஆறு கிலோமீட்டர் தொலைவிலிருந்து ஏதோ ஒரு குட்டிச்சுவரை காட்டினார்களாம். அதைக்கூட எட்டிப் பார்க்கத் தடை. குளிரைக்கூட முழுவதுமாக அனுபவிக்க முடியவில்லையாம். எங்கே போனாலும் எறும்பு போல் வரிசையாக போக வேண்டுமாம். 'பேசாம அதுக்கு எறும்பு கூடவே போயிருக்கலாம்' என்று குறைபட்டுக் கொண்டவர், 'இந்த மாதிரி ஜாலியா ஃப்ரெண்ட்சோட சுத்தறது தான் ஜாலி' என்று குதூகலித்தார்.

'ஊர் சுத்தறது ரொம்ப நல்லது' சுற்றுலா சாஸ்திரப்படி அடிக்கடி குளிர் பிரதேசத்துக்கு வந்துட்டு போனா, ஹார்ட், கிட்னி, லிவர், எல்லாம் நல்லா வேலை செய்யும்' என்கிறார் செலினா.

''ஆ...ஆ... மாாாா'' என்று இதற்கும் அநியாயமாக வழிமொழிந்தார் ஜூலி.

- மருதன்



# "உலகம் என் உடைகளை அணிகிறது!"



ரோட்டில் சாதாரணமாக மக்கள் நடப்பது போல மிகவும் சாதாரண மாகிவிட்டன கேட் வாக் ஷோக்கள்! சொல்லப் போனால் இப்போது ரோட்டில் பல இளம் பெண்கள் சாதா ரணமாகக் கூட நடப்பதில்லை! கேட் வாக் தான் பண்ணுகிறார்கள்!

பல மாடல்களைத் தெரிந்து வைத்தி ருப்போம். ஆனால் அவர்களின் உடை களுக்கு உயிர் கொடுக்கும் உடை வடிவமைப்பாளர்கள் பற்றி அவ்வளவு தெரியாது. தெரிஞ்சுக்க லாமா!

ரீத்து பெரி - இந்தி யாவின் முதன்மையான பேஷன் டிசைனர். பாலிவுட் பார்ட்டிகள் மட்டுமல்ல... சர்வதேச மாடல்களும் மயங்கும் வசீகர பேஷன் டிசைனர்! சுருக்கமாகச் சொல்வதா னால் பூனை நடை அழகிகள் பூஜிக்கும் பூ, ரீத்து!

**1987**-ல் தனது பட்டப் படிப்பை டெல்லி பல்கலைக்கழகத்தில் முடித்த இவருக்கு 'வேலை...? அப்புறம் சும்மா இருக்க விரும்பாமல், தனக்கான உடை களைத் தானே டிசைன் பண்ண ஆரம் பித்தார். நண்பர்களுக்கு, தெரிந்தவர் களுக்கு என ஆரம்பித்தவருக்கு, பின் அதுவே பிசினஸாக மாறியது. 1988-ல் டெல்லி இன்ஸ்ட்டியூட் ஆஃப் பேஷன் டெக்னாலஜியில் கோர்ஸ் பண்ணியவர், 'லாவண்யா' என்ற பெயரில் பேஷன் ஸ்டுடியோ ஆரம்பித்து அப்புறம் பேஷன் உலகில் மேலே, மேலே, மேலே...! 1995-ல் 'சன்ஸ்க்ரிட்டி' என்ற பெயரில் நடந்த பேஷன் ஷோ இவர் வாழ்க்கையில் ஒரு திருப்பு முனை எனலாம். இந்திய கலாசாரத்தின்படி இவர் வடிவமைத்த உடைகள் ஹிட் ஆக, இந்திய அளவில், சர்வதேச அளவில் தவிர்க்க முடியாத பேஷன் டிசைனராக மாறிவிட்டார் ரீத்து! கடந்த சில வருடங்களாக, வருடத்திற்கு நான்கைந்து பேஷன் அவார்டுகளை அள்ளிக் கொண்டிருக்கிறார் ரீத்து!

'ஜெம் ஆஃப் இந்தியா', 'ஆஸ்மி உமன் அவார்டு', 'தாதா பாய் நௌரோஜி அவார்டு' போன்றவை இவர் வாங்கிய அவார்டுகளில் முக்கிய மானவை.

பல பெரிய கம்பெனி ஊழியர்களின் சீருடைகள், பல ஸ்டார் ஹோட்டல் பணியாளர்களின் சீருடைகள், டெல்லி போலீசின் சீருடைகள் - இப்படி பலர் ரீத்துவின் கைவண்ணத்தில் தான் உலா வருகின்றனர். நடந்த அட்லாண்டிக்ஸ் ஒலிம்பிக்ஸில் பங்கேற்றவர்களுக்குக் கூட உடைகள் டிசைன் பண்ணிக் கொடுத்தது ரீத்துதான்.

உலகம் முழுவதும் பேஷன் ஷோக் கள் என எப்போதும் பிஸியாக கேட் வாக்கிக் கொண்டே இருக்கிறார் இவர்.

பல முன்னணி பத்திரிகைகளில் பேஷன் பற்றிக் கட்டுரைகள் எழுதி வரும் ரீத்துவுக்கு பிடித்த பாலிவுட் நடிகை மாதுரி தீட்சித்!

'ஒருத்தரோட வெற்றிக்குப் பின்னால் அவங்களோட உடைகளும் முக்கியப் பங்கு வகிக்குது! அந்த விஷயத்துல என்னோட சிறு பங்கும் இருக்கறது மனசுக்கு நிறைவைத் தருது!" - ரீத்து அடிக்கடி கூறும் வாசகம் இதுதான்.

**- முகில்**

"மழை தரும் மலையையே
குடையாகத் தூக்கினேன்...
மனமிருந்தால் மலையும்
குடையாகுமெனக் காட்டினேன்!"
- ஸ்ரீகிருஷ்ணன்

வெளியே இருந்து கேட்ட அந்த அசரீரி போன்ற குரல் சீனிவாசனை ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது. ஆனால் அது அசரீரி இல்லை... அவர் தங்கியிருந்த இடத்திற்கு அருகில் ஒரு தமிழர் குடியிருந்தார். அவர்தான் அங்குள்ள யாரோ ஒரு சீனிவாசனுக்கு அப்படிச் சொல்லிக் கொண்டிருந்தார்.

ஆனால் ஜோதிடர் அதை கப்பென்று பிடித்துக் கொண்டார்.

"என்ன யோசனை... பெருமாளே சொன்னமாதிரி இது. வாங்கிக்கும். சாளக்கிராமத்தை எந்தத் தீட்டு தீண்ட முடியும்? அது எங்க இருந்தாலும் அது அதுவாத்தானே இருக்கும்!"

- என்று கேட்க, அதற்கு மேல் சீனுவால் மறுக்க முடியவில்லை. சாஸ்திரிகள் பையோடு அப்படியே கொடுக்க, சீனு உள்ளிருந்து ஒவ்வொரு கல்லாக எடுத்துப் பார்த்தார். கூடவே ஏட்டுக் கட்டும் அந்த அழுக்கு

# எங்கே என் கண்ணன்?

14

நோட்டும்...

"இது என்ன?"

"இதோட சேர்ந்து வந்தது..."

"இதை இதுக்கு முந்தி யார் பூஜை செய்துண்டிருந்தா? இப்படியா இதை ஒரு அழுக்குத் துணிப் பையில வெச்சக்கறது?"

"எனக்கு ஒரு கேள்விக்கும் பதில் தெரியாது. ஆனா ஒண்ணுமட்டும் தெரியும். இதை நான் ஒரு பிராமணனா நின்னு சொல்லலை. கணக்கு போடத் தெரிஞ்ச ஒரு ஜோசியனா நின்னு சொல்றேன். இதுக்குப் பின்னால ஒரு பெரிய தபஸ் இருக்கு. யாரோ ஒரு மகான் அந்த கிருஷ்ணன் ஞாபகமாகவே வாழ்ந்துட்டு போயிருக்கார். அவரோட ஒரே லட்சியம் கிருஷ்ண தரிசனம்! அஞ்சையும் மூணையும்

எங்க, யார், எப்ப, எப்படிக் கூட்டினாலும் எப்படி எட்டு வந்தாகணுமோ, அந்த மாதிரி அந்த தபஸ்விக்கு, அவர் தபசுக்கு கிருஷ்ண தரிசனம் கிடைச்சாகணும். அவருக்குத் தரிசனம் தர கிருஷ்ணனும் வரப்போறான். ஒரு மந்திரி வரதுக்கு முன்னால எப்படி கலெக்டர் ஆபீசுக்கு தகவல் வந்து தெருவெல்லாம் சுத்தமாகி, பாதுகாப்புக்கு போலீசெல்லாம் அங்கங்க வந்து நின்னுடறானோ, அப்படி கிருஷ்ணனோட விஜயத்தை ஒட்டியும் அங்கங்கே அதுக்கான ஏற்பாடுகளும் சமிக்ஞைகளும் வர ஆரம்பிச்சாச்சு. அந்தக் கண்ணனோட பூலோக விஜயத்துல எனக்கும் உங்களுக்கும் கூட பங்கு இருக்கு. அதனாலதான் இந்த சாளக்கிராமங்கள் என் கைக்கு வந்தது. அப்புறமா உங்க கைக்கு வந்துருக்கு! உங்களைச் சமாதானப்படுத்தி ஒத்துக்க வைக்க வெளிய ஒரு சீனிவாசன் வர, அவரைப் பார்த்து இங்க இருக்கற உங்களை வாங்கிக்கச் சொல்லியிருக்கார்.

ஒண்ணைத் தொட்டு ஒண்ணுன்னு ஒரு வரிசைல எல்லாம் நடந்துண்டே போறது. இவ்வளவுக்குப் பிறகும் இதை வெச்சுக்கறதுல உங்களுக்கு மனசுக்கு சங்கடமா இருந்தா தூக்கிப் போட்டுருங்கோ. அடுத்து என்ன ஆறதுன்னு நானும் பாக்கறேன்..."

ஜோசியர் ஒரு பாட்டம் பேசி முடித்துவிட்டு உத்தரவு வாங்கிக் கொண்டார்.

சீனுவுக்கோ அலையடித்து ஓய்ந்த மாதிரி இருந்தது. அப்பொழுது பார்த்து பிரம்புக் கூடையோடு வந்த கணேஷ், அந்தப் பையையும் சாளக்கிராமங்களையும் அவரிடம்



பார்த்துவிட்டு விக்கித்துப் போனான். அவரும் அவனது கைக் கூடையைப் பார்த்து ஆச்சரியப்பட்டார்.

"இந்தப் பை எப்படி உங்ககிட்ட?"

"அது இருக்கட்டும்... இது என்ன என்கிட்ட இருக்கற கூடை மாதிரியே...?"

"கடைத் தெருவுல வித்துண்டுருந்தான். கலை அழகோட இருக்கறதால வாங்கிண்டு வந்தேன். ஆமா இந்தப் பை...?

"இது ஒரு கூத்து... ஜோசியர் ஒருத்தர் என்னை இங்க எதிர்பாராம பார்த்துட்டார், அவர் ஒரு சைவார்த்தி. சானக்கிராமத்தை வைஷ்ணவனான என்கிட்ட தள்ளிட்டுப் போய்ட்டார். இது யாரோடது, என்ன ஏதுன்னு ஒண்ணும் தெரியல. கேட்டா அவர் ஒரு கதையே சொல்லிட்டுப் போறார்."

"கதையா... என்ன கதை சொன்னார்...?"

"என்னத்த சொல்ல... கண்ணன் வரப் போறானாம். ஒரு மந்திரி வரப்போற மாதிரி அதுக்கான முன்னேற்பாடுகள் நடந்துண்டு ருக்காம். எல்லாம் ஒரு கணக்குன்னு அவர் பாட்டும் ஏதேதோ சொல்லிட்டுப் போய்ட்டார்..."

- கணேஷ் உடனே ஒரு தெற்றுச் சிரிப்பு சிரித்தான்.

"அந்த ஜோசியர்கிட்ட இந்தப் பையை தந்தவனே நான்தான்! இது இப்ப உங்ககிட்ட வந்துருக்கு..." என்றான்.

"என்னப்பா சொல்றே நீ... அப்ப இது யாருதுன்னு உனக்குத் தெரியுமா?"

"ஒரு அழுக்கு சன்யாசின்னு அவரைச் சொல்லலாம். அவர்தான் என் கைல கொடுத்துட்டு கங்கைல இறங்கினார். இறங்கினவர் திரும்ப கரை ஏறலை. கங்கைல மூழ்கி செத்தா மோட்சம்னு சொல்லியிருக்கறத நம்பி அப்படியே போய்ட்டதா நினைக்கறேன். நான் இதை ஜோசியர் கையில கொடுத்துட்டு வந்துட்டேன். ஆனா இது அப்ப அவர் சொன்ன மாதிரியே, நான் இருக்கற இடத்துக்கே திரும்பி வந்துருக்கு..."

- என்று முடித்தான் கணேஷ். அப்போது, "என்ன இன்னும் பூஜைய ஆரம்பிக்க லையா?" - என்று திரும்பவும் ஒரு வெளிக் குரல், எட்டிப் பார்த்த சீனுவுக்கு அது யாரோ யாரிடமோ கேட்ட கேள்வியாக இருந்தாலும் அவரைத் தூண்டிவிட்ட ஒரு கேள்வியாகவும் தோன்றியது.

"என்ன செய்யப் போறீங்க... தூக்கி தூரப் போட்டுட்டு அடுத்த வேலையைப் பாருங்க" என்ற கணேஷ், "உங்க பூஜை முடிஞ்சுதா?"

"நீ ஹார்ட் அட்டாக்கில்தானே இறந்தாய்... தலையில் என்ன கட்டு?"
"வரும் வழியில் விமானம் கிராஷ் லாண்டிங் ஆகி இடித்து விட்டது பிரபோ!"
- என். கோமதி

என்று கேட்டான்.

சீனு தலையை ஆட்டினார்.

"நான் கொஞ்சம் மடம் வரை போய்ட்டு சில பேப்பர்ஸை டிக்டேட் பண்ணிட்டு வந்துடறேன். நீங்க தயாரா இருங்க. இங்க இருந்து ஒரு கார்ல நாம கயாவுக்கு கிளம்ப றோம். ஒரு மூணு மணி நேர பயணம்தான். அங்க நீங்க உங்க காரியங்களை முடிச்சிண்ட பிறகு ராத்திரியே திரும்பிட றோம்..." என்றபடியே கிளம்பினான். ராஜம் மௌனமாக அனைத்தையும் கேட்டுக் கொண்டிருந்தவள், அருகில் வந்தாள். சீனுவைப் பார்த்தாள்.

"ராஜம் நீ என்ன சொல்றே?"

"இதுல நான் சொல்ல என்ன இருக்கு?"

"இல்ல முன்னூறு வருஷமா நம்ம ஆத்துல இருக்கற பெருமாளோட இதை..."

"இதைன்னு நீங்க சொல்லும்போதே ஒரு கல்லாதான் இந்த சானக்கிராமங்களை நீங்க நினைக்கறது தெரியறது. ஒரு தடவைக்கு இரண்டு தடவை அசரீரி வாக்கு வந்தும் உங்களால இதைப் புரிஞ்சுக்க முடிய லைன்னா, எனக்கு ஆச்சரியமாவும் இருக்கு. அவன் எல்லா இடத்துலயும் இருக்கான். இருந்தாலும் இந்த சானக்கிராமம் வழியா வெளிப்படறான்கறதால் தான் இதுக்கு மகத்துவம். ஆனா நம்ம ஆத்து சானக் கிராமத்துல மட்டும் அவன் இருக்கறதா நினைக்கறதால தான் மத்ததெல்லாம் வெறும் கல்லா தெரியறது. லோகம் நம்பளை இப்படி எல்லாம் தான் யோசிக்கும்படி சொல்லிக் கொடுத்துருக்கு. ஒரு கட்டத்துக்கு மேல உடைச்சிண்டு சுயமா சிந்திக்க ரொம்ப பேரால முடியறதேயில்லை..."

- என்று ராஜம் பேசிய பேச்சில் ஆழ மான அர்த்தச் செறிவு. அதற்கு மேல் சீனு யோசிக்கவில்லை. அந்த சானக்கிராம கற்கள் அவரது பிரம்பு மூங்கில் கூடையிலுள்ள கற்களோடு போய் சேர்ந்து கொள்ள, 'சபாஷ்' என்கிற மாதிரி புறத்தில் இருந்து ஒரு மணிச் சப்தம்.

ராஜம் ஜோசியர் சொன்னதைத்தான்



நினைத்துப் பார்த்தாள்.

'எல்லாமே கண்ணன் வருவதற்கான அறிகுறிகள்... முஸ்தீபுகள்!'

மடத்து வேலையை முடித்து விட்டு வெளியே வந்த கணேஷ், எதிரில் இருந்த எஸ்.டி.டி. பூத்துக்குச் சென்று ஆடிட்டருக்கு போன் செய்தான்.

"சார்... நீங்க சொன்ன அந்த சீனுங் கறவர் அவர் மனைவியோட வந்துட்டார். இன்னும் கொஞ்ச நேரத்துல கயாவுக்கு அவரோட நானே கார்ல போறேன். அவரோட அனுப்ப சரியான நபர் கிடைக் கல. அதான்..." என்றான்.

"சந்தோஷம் கணேசா. நீயே அவர் கூட போவேன்னு நான் கொஞ்சமும் எதிர் பார்க்கல. அப்புறம் ஒரு விஷயம்... அவர் ரொம்ப ஆசாரமானவர். அவர்கிட்டே விவாதமெல்லாம் பண்ணாதே!"

"என்னை உரசாத வரை நான் எதையும் செய்ய மாட்டேன். அப்புறம் சார். இவா இங்க இருந்து கிளம்பின பிறகு, நான் கொஞ்சம் மும்பை வரைபோக வேண்டி யிருக்கு."

"எதுக்கு?"

"என் அப்பா இப்ப மும்பைல திரிஞ்சிண்டிருக்கறதா தகவல்."

"அப்படியா சங்கதி... கவலைப்படாதே. அங்கேயும் நம்ம பார்ட்டிகள் பல பேர் இருக்கா. நீ கிளம்பும்போது சொல். நான் ஏற்பாடு பண்றேன்."

"தேங்க்யூ சார்."

போனை வைத்துவிட்டு திரும்பினவன் எதிரில் அஜந்தா சிற்பமாய் ஓர் இளம் பெண். கடிதாரில், நெற்றி மேல் அமர்ந் திருக்கும் தூக்கிவிட்ட கூலிங்கிளாஸ் சகிதம், கேமரா ஃப்ளாஷ் போல பார்த்த மாத்திரத்தில் ஒரு வெட்டு வெட்டினவன்,

"எக்ஸ்யூஸ் மீ... நீங்க தமிழ் நாடா?" - என்றான்.

"யெஸ்..."

"என் பேர் அனுராதா... சென்னைல இருந்து வரேன். நான் ஒரு ஜர்னலிஸ்ட்..."

"சந்தோஷம். நான் இப்ப என்ன செய்யணும்?"

"இங்க பாதுகாப்பா தங்க ஒரு நல்ல இடம்..."

"தனியாவா வந்திருக்கிங்க?"

"ஆமாம்... வாரணாசி பற்றி ஒரு கட்டுரை எழுத வேண்டியிருக்கு, தீபாவளி மலருக்காக..."

"உங்க பத்திரிகைல எந்த ஏற்பாடும் செய்யலையா?"

"இல்ல... ஒருவர் காசிக்குப் போய் இறங்கி, அங்க பார்க்க வேண்டிய எல்லா இடங்களையும் பார்த்து முடிச்சிட்டு கிளம்பி வர்றதுல இருக்கற சௌகர்ய அசௌகர்யங்களை, ஒரு லைவ் ரிலே மாதிரி சொல்றதுதான் என் கட்டுரையோட நோக்கம். ஆகையால இங்க வந்து பார்த்துக் கலாம்னு கிளம்பி வந்துட்டேன்."

"பரவால்லியே... ரொம்ப துணிச்சலான பெண்ணா இருக்கிங்களே. இவ்வளவு தூரம் நீங்க வந்துருக்கறதே என் வரைல பெருசு தான்! ஜங்ஷன்ல இருந்து நீங்க ஆட்டோ, டாக்ஸிகாரங்ககிட்ட இருந்து தப்பி வந்ததே, பாகிஸ்தான் பார்டர்ல எதிருண்டுகள் நடுவுல பஸ்டி அடிச்சு வந்தா மாதிரி இருக் குமே...?"

அவன் கேள்விக்கு அவள் சிரிக்க இருவரும் அப்படியே நடந்தனர்.

அறையில் சீனு அந்த அழுக்கு நாற்பது பக்க நோட்டைத் திறந்திருந்தார். நாராயண நாமம் அவருக்குள் தேனைப் பூசிற்று. அப்படியே ஏட்டுக்கட்டை திறந்து பார்த் தார். சமஸ்க்ருத எழுத்துக்களில் ஸ்லோக வரிகள். கண்களை இடுக்கிக் கொண்டு படித்துக் கொண்டே போனார். நடுநடுவே அதன் பொருள் புரிந்து 'ஆஹா'வென்று சிலாகிப்புகள். ஒரே ஒரு ஏட்டில் தமிழ் எழுத்துகள். ஆச்சரியம் அவரை அள்ளி யது. பக்கத்திலேயே கணேசன் வைத்து விட்டுப் போயிருந்த அக்கவுண்ட்ஸ் ஃபைல். அதன் முகப்பில் அவன் பெயர் எழுதி முகவரியும் எழுதியிருந்தான். யதார்த்தமாக பார்த்த சீனு, ஏட்டிலும் பைலிலும் ஒரே மாதிரி கையெழுத்தைக் கவனித்தார்.

(தொடரும்)

**கராத்தே தியாகராஜனிடம் கேட்கக் கூடாத 10 கேள்விகள்**

1. 'கண்ணாமூச்சி'தான் உங்களுக்குப் பிடிச்ச விளையாட்டா?
2. காங்கிரஸ்ல சேர்றதைவிட, எந்த கோஷ்டியில சேர்றதுங்கறதுதான் உங்களுக்கு ரொம்பக் குழப்பமாமே?
3. உங்களை வரவேற்று 'விளம்பர போர்டு' வைக்கப் போறதா சொல்றாங்களே... எதுனா பிரச்னை வருமா?
4. மேம்பால ஊழல் வழக்கு, 'ச்சும்மா' போட்ட வழக்குன்னு அறிக்கை விடப்போறதா சொல்றாங்களே. நிஜமா?
5. ஜெயா டி.வி.க்கு மட்டும் பேட்டி தராம அடம்பிடிக்கறீங்களாமே?
6. அது எப்படி எப்போ கேட்டாலும் 'ரெண்டு நாள்ல வந்துடுவேன்'னு வார்த்தை மாறாம பேட்டி தர்றீங்க?
7. இனிமே உங்க இதய தெய்வம் 'அன்னை'தானே?
8. இனிமே உங்க வீட்டு தோட்டத்தை மட்டும் தானே விசிட் பண்ணுவீங்க?
9. 'யா... ஹூ..'தான் உங்களுக்குப் பிடிச்ச சர்ச் என்ஜினாமே?
10. புரூஸ்லீயைவிட, 'கராத்தே' என்னும் வார்த்தைக்கு உலகப் புகழ் வாங்கித் தந்தது நீங்கதானே?

- பரமு

# போட்டுத் தாக்கு!



